 

NERUNCHI MULLU

First Edition May 2019




# நெருஞ்சி முள்ளு

இரு சிறுகதைகளும் ஒரு குறுநாவலும் அடங்கிய தொகுப்பு இது.

**இ.தியாகலிங்கம்**

**சுயவெளியீடு**

**உதவி**

**lulu.com**

**NERUNCHI MULLU**

**(A new short novel and short story collections from Norway)**

**First Edition**

**May 2019**

ISBN: 9780244182489

**Publication Editor**



 

நெருஞ்சி முள்ளு

NERUNCHI MULLU

First Edition May 2019

**R.Thiagalingam**
**Vetlandsveien 117**
**0686 Oslo**
**Norway**

**Pages: 61**

**Printed & Published by**
**Lulu.com**

## என்னுரை

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.

நான் உரைப்பதற்கு எதுவும் இல்லை. இது... உங்கள் சுவைப்பிற்கானது.

அன்புடன்

இ.தியாகலிங்கம்

http://www.karainagaran.com
ratnamt67@gmail.com

## உள்ளே...






நெருஞ்சி முள்ளு
NERUNCHI MULLU
First Edition May 2019

# நெருஞ்சி முள்ளு

**குறுநாவல் இ. தியாகலிங்கம்**

## 1 றிக்ஸ் கொஸ்பிற்றல்

காலை ஆறு இருபது மணியளவில் நீல அட்டையாக அந்த நீண்ட இரும்பு வண்டி வேகமாக வந்து, சடுதியாகத் தனது வேகத்தை இழந்து, அந்தத் தரிப்பிடத்தில் பதுமையாக அடைக்கலமாகியது. வேலை தொடங்குவதற்குப் பத்து நிமிடங்கள் இருந்தாலும், அவசரம் யாரையும் விட்டு வைப்பதில்லை. உள்ளே சென்று பலரும் சீருடை மாற்றிக் கொண்டு, வேலை செய்யும் பகுதிக்குச் செல்ல வேண்டும். அதனால் மணி ஆறு இருபதாக இருந்தாலும் வண்டி நிறைய வேலையாட்கள் கடைமை உணர்வோடு அந்த மருத்துவமனைக்குள் பாயத் தயாராக இருந்தவர்கள்; ஆசனத்தை விட்டு எழுந்து நின்றார்கள்.

றிக்ஸ் கொஸ்பிற்றல் ஒஸ்லோவில் இருக்கும் நான்கு மருத்துவ மனைகளில் மிகவும் பெரிய, நவீனமான மருத்துவமனை. ஒஸ்லோவில் இறுதியாகக் கட்டப்பட்ட மருத்துவமனையும் இதுவே. இதில் ஐந்து ஆயிரத்துக்கு மேற்பட்ட நபர்கள் வேலை செய்கிறார்கள். இந்தக் கட்டடக் காட்டிற்குள் முதன்முதல் புகுபவர்களுக்கு எங்கே எப்படிப் போவது என்பது திசை தெரியாத இயற்கையின் காட்டிற்குள் அகப்பட்ட அவஸ்தையைத் தரும். பல கூறுகளாகப் பரந்து கிடக்கும் இந்த மருத்துவமனையின் ஒரு பக்கத்திலிருந்து மறு பக்கம் செல்வதற்குப் பல நிமிடங்கள் செல்லும். அதைவிடத் தரிப்பிடத்திற்கு மறுபக்கம் நோயாளிகள் தங்கும் வசதி கொண்ட விடுதியோடு பல கட்டடத் தொகுதிகள் இருக்கிறன. அவற்றிற்கு இடையில் ஒரு ஆகாயப் பாலம் இருக்கிறது. அந்தப் பகுதிக்கும் பிரதான கட்டடத் தொகுதிக்கும் இணைப்பாகப் பிறிதொரு ஆகாயப்பாலம் இருக்கிறது.

அனைத்துக் கட்டடங்களின் உச்சியிலும் சிவப்பு விளக்குகள் எரியும். அவை உலங்கு வானூர்திகளுக்கு எச்சரிக்கை வழிகாட்டி. உலங்கு வானூர்திகள் இறங்கி ஏறுவதற்குப் பிரத்தியேக தளம் உண்டு. அவை அப்படி இறங்கி ஏறினால் அதன் எரிபொருள் மணம் மூடியிருக்கும் சாளரங்களை ஏமாற்ற முடியாவிட்டாலும், சுத்தமான காற்றை உள்ளே கொண்டுவரும் குழாய்கள் மூலம் உள்ளே வந்துவிடும். சிறிது நேரத்தில் வந்த மணம் அதே வேகத்தில் மறைந்தும் போய்விடும். கட்டடத்திற்குள் இருக்கும் வழியைச் சமனாக்கும் இயந்திரங்கள் அதற்குத் துணை போகும்.

றிக்ஸ் கொஸ்பிற்றல் ஏ, பி, சி, டி, ஈ என்று பல தொகுதிகளைக் கொண்டது. ஒவ்வொரு தொகுதியும் பல கிளைகளைக் கொண்டன. அந்தக் கிளைகள் குறைந்தது நான்கு மாடிகளைக் கொண்டன. அதைவிட இடைத் தளம் ஒன்றும் நிலக்கீழ் தளமும் பிறிதாக உண்டு. இந்தக் கட்டடத் தொகுதிகள் ஒன்று, இரண்டு, மூன்று என்று பல கிளைகளாகப் பிரிந்து செல்லும். இப்படியாகப் பரந்து கிடக்கும் அந்த மருத்துவமனை ஒஸ்லோ பல்கலைக்கழகத்தோடு இணைந்து பல ஆராய்ச்சிகளைச் செய்து வருகிறது. அதற்கென்றே பல பகுதிகள் உள்ளன. அதற்குள் ஒரு பெரிய நூல்நிலையம், சிறிய நோயாளிகளுக்கான நூல்நிலையம், இரண்டு உணவகங்கள். அதில் ஒன்று வேலை செய்பவர்களுக்கு. மற்றையது நோயாளிகளுக்கும் அவர்களோடு வருபவர்களுக்குமாக தனித் தனியாக இருக்கிறது. அதைவிட ஒரு சாப்பாட்டு அறை இருக்கிறது. அத்தோடு ஒரு மருந்துக்கடையும் உண்டு. இப்படியாகப் பலவசதிகள் அங்கு உண்டு. அவற்றில் பல விரிவுரை நடத்தும் அரங்கங்கள், மாபெரும் சமையல் அறை என்று மேலும் அவற்றின் பட்டியல் நீண்டு கொண்டே செல்லும். இவற்றை விட இந்தக் கட்டடங்களுக்குக் கீழே உள்ள தளம் நீண்டு செல்லும். அங்கே பொருட்களை உள்வாங்கும் பகுதி தொடக்கம், சலவை செய்யும் இடம் எனப் பல பகுதிகள் இருக்கின்றன. இப்படியாக மாபெரும் தொழிற்சாலையாக இந்த மருத்துவமனை நித்தமும் இருபத்து நான்கு மணி நேரமும் உறக்கம் இன்றி இயங்கிய வண்ணமே இருக்கும்.

இப்பெரும் மருத்துவமனையைச் சுத்தமாக வைத்துக் கொள்வதற்கு ஒரு அணி இருக்கிறது. அதில் பல நாட்டவர்கள் வேலை செய்கிறார்கள். அந்த அணியில் ஈழத்தமிழருக்கும்

முக்கிய பல இடங்கள் உண்டு. அப்படியான ஒரு இடத்தைச் சந்திரன் தனக்கெனத் தக்க வைத்துக் கொண்டான். ஈழத்திலிருந்து வந்தவுடன் நோர்வேப் பணத்தை இலங்கைப் பணத்திற்குப் பெருக்கிப் பார்த்து எந்த வேலையாக இருந்தாலும் சரி என்று வீழ்ந்தவர்கள் வீழ்ந்தவர்களே... அதில் சந்திரனும் ஒருவன். இந்த மருத்துவ மனையில் கழுவும் வேலை தொடக்கம் ஆராய்ச்சி செய்யும் வேலைவரை ஈழத்தமிழர்கள் வேலை செய்கிறார்கள் என்பது கண்காணும் உண்மை. சிலர் பணம் வேண்டாம் படிப்போம் என்று படித்தவர்களும் உண்டு. அவர்களுக்கு இப்பொழுது நல்ல வேலைகளும் உண்டு.

*

அன்று எட்டுமணி இருக்கும். சந்திரனுக்குச் சவாரி செய்யும் வேலை. சவாரி செய்யும் வேலை என்றால் குதிரையில் ஏறிக் குன்றுகள் தாண்டும் சவாரி அல்ல அது. அதற்குப் பதிலாக இது நிலத்தைத் துப்பரவு செய்யும் இயந்திரத்தை ஓட்டி அந்த மருத்துவமனையின் பல பகுதிகளைத் துப்பரவு செய்யும் வேலை. அன்று சந்திரன் கண்ணாடித்தெரு எனப்படும் ஒரு வீதி போல அமைந்து இருக்கும் பகுதியைத் துப்பரவு செய்யத் தொடங்கினான். அது உதாரணமாக பி1, பி2 இடையே தொடங்கி அப்படியாக வரும் பல கட்டடங்களை ஊடறுத்து நீண்ட பாதையாகத் தொடர்ந்து செல்லும். அப்படி அவன் அந்த இயந்திரத்தை ஓட்டும் போது அவனைத் தாண்டிப் பலர் சென்றார்கள். இந்த மருத்துவமனைக்குத் தினம் தினம் ஆயிரம் ஆயிரம் நபர்கள் வந்து போவார்கள். அவர்களைப் பார்ப்பதும், பார்த்ததும் அதை மறந்து போவதும் அவன் இயல்பு. அன்றும் அவன் தனது இயல்பைத் தொடர்ந்தான். அப்போதே அவள் வெள்ளை முழுநீளச் சீருடையுடன் சிரித்த வண்ணம் அவனைத் தாண்டிச் சென்றாள். அவளைப் பார்த்த அவனுக்குத் தலைக்குள் ஏதோ செய்தது. ஒரு கணம் அவன் தனது இயந்திரத்தை நிறுத்தி அவள் போவதைப் பார்த்த வண்ணம் நின்றான். அவளும் அதை அறிந்தவள் போல ஒரு கணம் திரும்பி அவனைப் பார்த்துவிட்டு அவசரமாகச் சிரித்துக்கொண்டு சென்றாள்.

யார் அவள் என்பது அவனுக்குத் தெரியாது. அவளை அவன் இதுவரையும் பார்த்ததே இல்லை. அவளது சீருடையைப் பார்த்தால் அவள் மருத்துவராகவோ அல்லது அதற்குப்

படிப்பதாகவோ இருக்க வேண்டும். வெளிநாட்டிற்குச் சென்று மருத்துவம் படிக்காது இங்கேயே மருத்துவம் படிப்பதோ, அல்லது படித்துவிட்டு வேலை செய்வதோ என்றால் அவள் மிகவும் கெட்டிக்காரியாக இருக்க வேண்டும் என்பதும் சந்திரனுக்கு விளங்கியது. அவள் ஒரு பார்வையில் அவனது இதயத்தை அவனிடம் இருந்து பிடுங்கி எடுத்துக் கொண்டு சென்றதான உணர்வில் அவன் துடித்தான். பின்பு தான் இப்படி அவஸ்தைப்படுவது சரியா என்று ஒருகணம் எண்ணினான். பல தமிழ் பெண்களை அவன் இங்கே கண்டிருக்கிறான். பார்ப்பார்கள்... பார்த்துக்கொண்டே போவார்கள். அந்தக் கணத்தோடு அவை முடிந்துவிடும். ஆனால் இவள் நினைவு மாத்திரம் அவனைத் தொடர்ந்து தொல்லை செய்தது. அவள் போய்விட்டாள். இங்கு ஒருதரம் பார்த்த நோயாளிகளை மறுதரம் பார்ப்பது அபூர்வம். ஒருதரம் பார்த்த அறிமுகம் இல்லாதவர்களை மறுமுறை பார்ப்பதும் அப்படியே. இவளை இனிப் பார்க்க முடியுமா என்பதே கேள்வியாக இருக்கும்போது அவளைப் பற்றிச் சிந்திப்பதில் என்ன பிரயோசனம் இருக்கிறது என்கின்ற கேள்வி அவனுள் எழுந்தது. அவளைப் பற்றிச் சிந்திக்காது வேலையில் கவனம் செலுத்த வேண்டும் என்று எண்ணினான். ஆனால் அடுத்த கணமே அவள் நினைவு அவன் மனதை நிரப்பியது. 'சீ என்ன அவஸ்தை இது?' என்று எண்ணிய வண்ணம் அவன் தனது வாகனத்தை மெதுவாகச் செலுத்தத் தொடங்கினான்.

## 2 சுகந்தி

சுகந்தியின் கண்களிலிருந்து சந்திரனைப் பிடித்து அதற்குள் செருகி வைத்தது போலக் குளிரோடு சேர்ந்த பளிங்கான ஒளி பட்டுத் தெறிக்கும். அது பல நெஞ்சங்களைத் தாண்டி இதயத்தை வருடுவதை அவள் கண்களைப் பார்க்கும் எதிர்ப்பாலார் உணர்வது உண்டு. ஐந்தடி மூன்று அங்குல உயரம் கொண்ட அவள் ஐம்பத்து இரண்டு கிலோ எடை கொண்ட கட்டழகி. செதுக்கியது போன்ற குத்திட்ட அவள் கொங்கைகள் எப்போதும் முறைப்பதான தோற்றத்தில் இருக்கும். புடத்தைத் தாண்டும் கறுப்பு வயிர இழைகளான அவள் அழகு பளபளக்கும் கூந்தல். பாரம் தாங்க முடியாது பாவமாக வளையும் அவள் மெல்லிடை. காதில் சிவப்புக்கல்

பதித்த காதணிகள். கையில் பொன் நிறத்தில் மின்னும் கைக்கடிகாரம். அதற்கு மேல் அவள் எந்த அணிகலனும் அணிந்து இருக்கவில்லை. அந்தக் கடிகாரத்தையும் அவள் வேலை செய்யும் போது அணிந்து கொள்ள முடியாது. அனைத்து உயிர்களின் இன்றைய உயிர்நாடியான அலைபேசி ஒன்றும் அவள் கையிலிருந்தது. அலைபேசி இன்று உலகையும் அதில் இருக்கும் மனித மனங்களையும் இணைப்பதற்கும், பிரிப்பதற்கும் ஏதுவான ஒரு சாதனமாக மாறிவிட்டது என்பது உரைக்கத் தேவையற்ற உண்மையாகும். இப்படியாகத் தோன்றிய அவளைத் தேவதை என்று சொல்ல முடியாவிட்டாலும் அழகான பெண் என்பதில் யாருக்கும் மறுகேள்வி எழாது. எழவும் முடியாது.

சுகந்திக்கு வரிசை தப்பாது செதுக்கியது போன்ற பற்கள். மெல்லிய இதழ்களுக்குச் செம்மையான சாயம் தரும் ஒரு புதிய அழகு. மென் நாதம் பேசும் அவள் சங்கீதம் பேசும் குரல். சுகந்தியோடு பழகுபவர்களுக்கு அவளை உடனடியாகப் பிடித்துவிடும் என்பது சர்வ நிச்சயம்.

*

அந்த அழகு அவன் கண்களைவிட்டு மறைந்து தொலைந்து போனது அவனுக்கு மிகவும் மனவருத்தமாய் இருந்தது. இருந்தும் அவன் அதைப் புறம் தள்ளி தனது வேலையைத் தொடர்ந்தும் செய்வதில் அக்கறை காட்டினான். அவன் பாடுபட்டு வேலை செய்தாலும் அடிக்கடி அவன் மனது அவனை ஏமாற்றியது.

சுகந்தி ஒரு அறை கொண்ட அடுக்குமாடிக் குடியிருப்பு ஒன்றை வாடகைக்கு எடுத்து அவளது உயிர்த் தோழி விமலாவோடு ஒஸ்லோவில் உள்ள நீடாலனில் வசித்து வந்தாள். இருவரும் இரண்டாயிரத்துப் பத்தில் ஐ.நா மூலம் அகதி அந்தஸ்துக் கிடைத்து நோர்வேக்கு வந்தார்கள். அப்படி அகதிகளாக வருபவர்கள் மிகவும் குறைவே. அந்தக் குறைவானவர்களில் இவர்கள் இருவரும் அடங்குவார்கள். அவர்கள் அப்படி அகதிகளாக வந்த காரணத்தை யாருக்கும் சொல்ல விரும்புவது இல்லை. அந்த வரலாற்றில் வேதனை மட்டுமே மிஞ்சி இருப்பது யாருக்கும் தெரிய வேண்டிய அவசியம் இல்லை. செயல் முக்கியமே தவிரச் செய்தவன் முக்கியம் இல்லை என்பது அவள் கொள்கை. இதை மீறி அந்த வேதனையை மீட்பது நெஞ்சை அறுத்து அவர்களை நித்தமும்

இடைவிடாது வதைக்கும் நினைவுகள். அந்த வதைப்பு தொடர் ஞாபகமாக அலையலையாக வந்து செல்லும். அதை விரும்பாத அவர்கள் அதைப் பற்றிப் பொதுவாகக் கதைப்பது இல்லை. கதைப்பது இல்லை என்பதோடு கதை முடிந்து விடுவதில்லை. கதை நோண்டும் பயில்வான்கள் நம்மில் பலர் உள்ளார்கள். அப்படியானவர்களிடம் அகப்பட்டால் சுகந்திக்கு ஏழாவது நரகத்தில் வீழ்ந்ததான அவஸ்தை தொடரும்.

*

சுகந்திக்கு அவன் தன்னைப் பார்த்தது நன்கு தெரியும். அப்படிப் பலர் நித்தமும் பார்க்கிறார்கள். பார்த்தவர்கள் சிரிக்கலாம். சிரிப்புக்குப் பதில் சிரிப்பைப் பரிசாகக் கொடுக்கலாம். இவை எல்லாம் ஒரு பழகிப்போன சம்பிரதாயம். அந்தக் கணத்தோடு அவை முடிந்துபோக அவர் யாரோ நாம் யாரோ என்பதாக இருக்கும். அப்படியானதே அவள் அன்றாட அனுபவம். அப்படியே இதுவும் என்பதில் அவளுக்கு எந்தச் சந்தேகமும் முதலில் இருக்கவில்லை. இருந்தாலும் அவன் நினைவு ஏனோ திடீரெனத் தோன்றியது. அவன் அழகாகவே இருந்தான். இதைவிடக் கற்பனையான அழகைத் தேடிக் காலத்தைப் போக்குவது அவள் நோக்கம் இல்லை. அவனுக்குக் காதோரம் மெல்லிய கீறு போன்ற வெண் நரை. மாநிறம். தன்னைவிட அவன் நான்கு அங்குலமாவது உயரமாக இருப்பான் என்று அவளுக்குத் தோன்றியது. அகலமான மார்பு. அழகான கண்களும் பரந்த முகமும் அவன் சொந்தம். அதில் தடித்த மீசை. வழித்து பளபளவென மினுக்கிய தாடி. அந்த இடத்தில் அல்லது கண்ணாடித் தெருவில் அவனை மீண்டும் காணும் சந்தர்ப்பம்கூடக் கிடைக்கலாம். ஆனாலும் தான் ஏன் அவனைப்பற்றிச் சிந்திக்க வேண்டும் என்று அவள் எண்ணி வியந்தாள். அவளுக்கு அவன் தொழில் ரீதியாக ஒத்துவரமாட்டான் என்பதும் வேலை ஒரு இணைப்புப் பாலம் ஆகாது என்பதும் விளங்கியது. மனரீதியாக ஒத்துப் போவதற்கு தொழில்ரீதியாக ஒத்துப் போகத் தேவை இல்லை என்பதும் அத்தோடு அவளுக்கு விளங்கியது. அவள் தனது அலுவலகத்தை வந்தடைந்துவிட்டாள். அங்கே அவளுக்கு நிறைய வேலைகள் இருந்தன. இதைப் பற்றிப் பின்பு சிந்திக்கலாம் என்று எண்ணிய வண்ணம் அவள் தனது வேலையில் மூழ்கத் தொடங்கினாள். புற்றுநோய் பற்றிய ஆராய்ச்சிப் பிரிவில் சுகந்தி தற்போது வேலை செய்கிறாள். அவளுக்கு யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத்தில் மருத்துவம்



 

படிப்பதற்கு இடம் கிடைத்து மூன்று ஆண்டுகள் முடித்த பின்பே மூளையில் அந்தப் பிசகு ஏற்பட்டது. அதனால் அங்கு மூன்று வருடங்கள் படித்ததை இங்கு நிரூபிப்பதற்கு ஒரு வருடம் பிடித்தது. இறுதியாக அது ஏற்றுக் கொள்ளப்பட்ட பின்பு பலரும் வாயில் கைவைக்கும் அளவிற்கு அவளது திறமை இருந்தது என்பதில் யாருக்கும் சந்தேகம் இல்லை. இப்போது இந்த மருத்துவமனையில் உள்ள ஆராய்ச்சியாளர்களில் அவளும் ஒருத்தி. இங்கே அவள் வேலை என்று தொடங்கிவிட்டால் வேறு எந்த நினைவுகளுக்கும் அவளிடம் இடம் இருக்காது. அதற்குள் மூழ்கி, அதிலேயே கரைந்து போய்விடுவாள். இன்றும் அவள் வேலை தொடங்கினாள். ஏனோ அவளால் வழமை போல வேலையில் கரைந்து போக முடியவில்லை. அவளை எண்ண அவளுக்கே இன்று வியப்பாக இருந்தது. மீண்டும் முயற்சித்தாள். அவள் மனதை அவளால் ஓரளவு வசப்படுத்த முடிந்தது. அதனால் அவள் ஒருவாறு வேலையில் மூழ்கினாள். இருந்தும் இடைக்கிடையே அதில் குழப்பம் ஏற்பட்டது. அது அதிக நேரம் நீடிக்கவில்லை. அவள் மீண்டும் விரைவாகத் தன்னிலை உணர்ந்து இவ்வுலகு வந்துவிட்டாள்.

சுகந்தி வேலை முடித்து வெளியே வந்தபோது ஐந்து முப்பது இருக்கும். அவள் வழமையாகவே இப்படிப் பிந்தியே வேலை முடிப்பாள். பல பிரிவுகளில் வேலை செய்பவர்கள் அப்போது வீடு சென்று விடுவார்கள். சுகந்தி அலுப்போடு வெளிக்கிட்டு வீட்டிற்குச் செல்ல நடை பயின்றாள். கண்ணாடி தெருவால் வரும்போது அவனைக் கண்ட இடத்தை இப்போது மீண்டும் பார்த்தாள். அவன் அங்கு இல்லை. நின்றிருந்தால் அதிசயம். அந்த இடம் காலை போல் இப்போது இல்லை. அங்கு ஒருவரும் இங்கு ஒருவரும் போய் வந்தார்கள். காலை நேரங்களில் சாரை சாரையாக மனித நடமாட்டம் உள்ள தெரு அது. இந்தத் தெரு என்பது கட்டடத்திற்குள் உள்ள பாதை. அதன் மேற்கூரை கண்ணாடியால் வேயப்பட்டு இருக்கிறது. உள்ளே சூரிய வெப்பத்தைக் கசிய விடுவதால் மிகவும் குறைந்த செலவில் மலிவான இயற்கையான வெப்பம் கிடைக்கும் இடம் அது. அதே போல் குளிர்காலத்தில் குளிரையும் கசிய விடும் என்பதும் உண்மையே. சுகந்திக்கு இது ஏமாற்றம் என்று இல்லை. என்றாலும் எதற்கும் கட்டுப்படாத எதிர்பார்ப்பு எழுந்து நிற்கத்தான் செய்கிறது.

தேவையற்ற சோர்வு என்கின்ற எண்ணத்தோடு அவள் நடந்தாள்.

## 3 மீண்டும் சந்திப்பு

அன்று வேலையைப் பிரித்துக் கொடுத்த போது சந்திரனுக்குக் கண்ணாடிப் பாதையில் மீண்டும் வேலை கிடைத்தது. அங்கே வேலை கிடைத்ததில் அவனை அறியாதே அவனுக்குச் சந்தோசத்தோடு கூடிய பரபரப்பு. ஏதோ ஒரு எதிர்பார்ப்பு அவன் அடிமனதில். அது நடக்கலாம் என்கின்ற நப்பாசை யதார்த்தத்தைத் தாண்டி அவன் மனதின் நம்பிக்கையாக... அவன் தாயிடம் செல்லும் கன்றாகத் தனது துப்பரவு செய்யும் வண்டியை எடுக்கச் சென்றான். அதைச் சரிபார்த்து எடுத்துக் கொண்டு கண்ணாடிப் பாதைக்கு அதை ஓட்டிச் சென்றான். பின்பு அந்தப் பாதையில் துப்பரவு செய்யத் தொடங்கினான். துப்பரவு செய்யும் வேலைகளில் மிகவும் இலகுவான வேலை இது. ஏறியிருந்து சவாரி செய்வதே இந்த வேலை. இயந்திரம் மற்றைய வேலைகளைச் செய்யும். சந்திரனுக்கு இயந்திரத்தில் இருப்பதோ இலகுவாக வேலை செய்வதோ பெரிதாகத் தோன்றவில்லை. அவன் மனதில் ஏனோ அந்த எதிர்பார்ப்பு. சரி அப்படி அவளைக் கண்டாலும் எப்படிக் கதைப்பது? எதைப்பற்றிக் கதைப்பது? எந்த எண்ணமும் அவனிடம் இருக்கவில்லை. மனம் பல விடையங்களுக்கு மிகவும் சுதந்திரமாக ஆசைப்படும். ஆனால் அதைச் செயற்படுத்துவதற்கு அதற்குத் துணிவு இருப்பதில்லை. இதுவும் அப்படியோ என்கின்ற சந்தேகம் அவனிடம் இருந்தது. அப்படி விடாது அவளைக் கண்டால் ஏதாவது கதைக்க வேண்டும் என்று எண்ணினான். என்ன கதைப்பது? அதை அவள் எப்படி எடுத்துக் கொள்வாள்?

சந்திரனின் கவனம் கண்ணாடிப் பாதையிலிருந்தாலும் அவளை அங்கே காணவில்லை. அதற்குப் பதிலாக யார் யாரோ அவனைக் கடந்து போனார்கள். சிலருக்குத் தலையாட்டிச் சிரிக்க அவர்களும் தலையாட்டிச் சிரித்தார்கள். சந்திரன் பொதுவாக அப்படிச் செய்வது உண்டு. பொதுவாகத் தமிழ்



 

ஆட்கள் என்று தெரிந்தால் அவன் நிச்சயம் அதைச் செய்வான். அனேகம் அப்படிச் செய்தால் அவர்களும் செய்வார்கள். தமிழ் ஆட்கள் மட்டும் அல்ல மற்றவர்களும் அப்படிச் செய்வார்கள். அதில் பொதுவாகப் பிழைத்தது இல்லை. சிலவேளை மாத்திரம் சிலர் அவதியில் வணக்கத்தை அவதானிக்காது சென்று விடுவது உண்டு. அவன் அதைக் குறையாக எடுத்துக் கொள்வதில்லை. எல்லா மனிதர்களும் எல்லா நேரத்திலும் ஒரேமாதிரியாக இருப்பதில்லை. சில நேரங்களில் அவர்களுக்கு ஏதாவது சிந்தனையாக இருக்கும்... அதில் கவனிக்காது சென்றுவிடுவார்கள். அதை எல்லாம் ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ள முடியாது. அடுத்த நாள் என்பது புதிதாகப் பிறக்கும் ஒரு நாள். அனைத்தையும் மறந்து அன்றைய நாளைப் புதுமையாகத் தொடங்க வேண்டும் என்பது அவன் எண்ணம். விட்ட குறை தொட்ட குறையை அடுத்த நாளுக்கு எடுத்துச் செல்லக்கூடாது என்பது அவன் நினைப்பு.

திடீரென உலங்கு வானூர்தி வந்து இறங்கிய சத்தம் கேட்டது. அதைத் தொடர்ந்து மண்ணெண்ணெய் நாற்றம் உள்ளே வந்தது. இது நித்தம் நடப்பதே. அதைத் தொடர்ந்து அம்புலன்ஸ் ஆட்கள் கட்டடத்திற்குள் ஒரு இளைஞனைக் கட்டிலில் அவசரமாகத் தள்ளிக் கொண்டு சென்றார்கள். இதில் சந்திரனுக்கு எந்தச் சுவாரசியமும் இல்லை. அவன் தொடர்ந்தும் கண்ணாடிப் பாதையைப் பார்த்துப் பார்த்து தனது வண்டியைச் செலுத்தினான்.

திடீரெனச் சுகந்தி ஓட்டமும் நடையுமாக வந்தாள். அவள் தனியே வருவாள் என்கின்ற எதிர்பார்ப்பு சந்திரனிடம். அப்படி வந்தால் அவளை மறித்து அவளோடு கதை கொடுத்து தனது உறவைத் தொடங்குவது என்று அவன் திட்டம் போட்டிருந்தான். சுகந்தி தனியே வருவாள் என்ற அவன் கனவு தவிடு பொடியாகியது. அவள் மருத்துவர் படை சூழ வெகு வேகமாகச் சென்றாள். அப்படி யாரையும் கவனிக்க நேரம் இல்லாது செல்பவளை எப்படி மறிப்பது? சந்திரன் ஸ்தம்பித்துப் போய்விட்டான். அவனுக்கு வாய் எழவில்லை. அவன் அவள் போவதைப் பார்த்த வண்ணம் நின்றான். அவள் அவனைப் பார்க்க முடியாத வேகத்தில் சென்றாள்.

சந்திரனுக்கு ஏமாற்றமாக இருந்தது. மேலே ஆய்வகத்தில் வேலை செய்யும் தமிழ் பொறியியலாளர் அங்கே வந்தார். அவர் சந்திரனைப் பார்த்து,

‘என்ன சந்திரன் பார்த்து ஓட்டுங்க... கவனம் எங்கையோ இருக்குது போல?’ என்றார். சந்திரனுக்கு அப்போதே முதன்முறை தனது கவனம் பிசகிப் போனது விளங்கியது. அவன் வழிந்த வண்ணம்,

‘அப்பிடி ஒண்டும் இல்லை. ஒரு சின்ன யோசினை. எண்டாலும் பெரிய தப்புத்தான். நன்றி அண்ணை. நீங்கள் என்னை இந்த உலகிற்குக் கொண்டு வந்திட்டியள். என்ன நீங்களும் விசி போல இருக்குது?’

‘அப்பிடி இல்லை... அங்கையும் இங்கையும் அலைய வேண்டிய வேலை.’

‘அது நல்லதுதானே? ஒரே இடத்தில இருந்தா நிறைய வருத்தம் வரும். இப்படி வேலை செய்கிற இடத்திலேயே அலைஞ்சு திரிஞ்சு வேலை செய்தா வேலையும் ஆச்சுது... உடற்பயிற்சியும் ஆச்சுதானே?’

‘உண்மை. எனக்கு இந்த வேலையில பிடிச்சதும் அதுதான். அதோடை தேவை இல்லாத தொந்தரவும் இல்லை.’

‘உங்களுக்கு அதிர்ஷ்டம் எண்டு சொல்ல வேணும். எங்கடை வேலையளை வரவர இறுக்கிக் கொண்டே போகிறாங்கள். மேல இருக்கிறவங்களுக்குச் சம்பள உயர்வு எண்டா எங்களுக்கு வேலைப்பழு அதிகமாக்கிறது எண்டு போகுது அவங்கடை திட்டம். என்ன செய்கிறது... நாங்கள் படிக்காமல் விட்டது எவ்வளவு தப்பு எண்டது இப்ப விளங்குது.’

‘அது உண்மை சந்திரன். எப்பவும் அடிமட்டத்தில முதல்ல கை வைப்பாங்கள். பணக்காரன் தொடர்ந்தும் பணக்காரன் ஆகிறான்... பிச்சைக்காரன் தொடர்ந்தும் பிச்சைக்காரன் ஆகிறான். அது எங்கையும் மாறாத பொது விதி போல இருக்குது.’

‘நீங்கள் சொல்லுகிறது உண்மை அண்ணை. வருங்காலத்தில படிக்காமல் இருக்கவே கூடாது. நாங்களும் வந்த உடன படிச்சிருக்க வேணும். இலங்கைக் காசுக்குப் பெருக்கிப் பார்த்திட்டுப் படிப்பக் கிடப்பில போட்டாச்சுது. அதுகின்ரை விளைவு நீண்ட காலத்தில இப்பதான் விளங்குது.’

‘படிச்சாக்கூட இப்ப காணாது. ஒரு பட்டதாரியா இல்லாட்டி அதுக்கு மேல இருக்க வேணும். அதோடை படிக்காத வேலையை வெளிநாட்டுக்காரருக்கு தாரைவார்த்துக் கொடுத்ததால அதில வாற கெடுபிடிகளை உரமாத் தட்டிக் கேட்கவும் அங்கை ஆட்கள் இல்லை. அதுக்குள்ள போகாமல் இருக்க வேணும் எண்டா நிச்சயம் உயர உயரப் படிக்கத்தான் வேணும்.’

‘நீங்கள் சொல்கிறது உண்மை. இனி நாங்கள் படிக்க இயலாது. ஆனால் பிள்ளைகளைக் கவனமா படிப்பிக்க வேணும். அப்படி எண்டாத்தான் அவங்கடை காலம் எண்டாலும் நல்லாய் இருக்கும்.’

‘சரி... நான் வாறன்.’

‘சரி... சரி... எங்களையும் பார்த்துக் கொண்டு திரிவாங்கள். நானும் வேலையைத் தொடருவம்.’

அவர் அதன் பின்பு போய்விட்டார். சந்திரனுக்கு இந்த இடத்தை முடித்துக் கொண்டு ஈ பக்கம் செல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது. அதற்கு மேலும் இங்கு நின்று மினக்கெட்டால் அது நோண்டியாகிவிடும் என்பது அவனுக்கு விளங்கியது. அவன் தனது வாகனத்தைச் செலுத்திக் கொண்டு அப்பகுதியை நோக்கிச் சென்றான்.

சுகந்தி அந்த அவசர சிகிச்சை நோயாளியைத் தனது குழுவோடு நின்று அவதானித்துவிட்டு அது முடிய ஆராய்ச்சிக்கான பொருட்கள் சிலவற்றை எடுத்துக் கொண்டு திரும்பி வந்தாள். போகும் போது இருந்த அவசரத்தில் சந்திரனைக் கவனிக்க முடியவில்லை என்றாலும் அவன் அங்கே நின்றது அவள் கடைக்கண்ணில் பதிவாகி இருந்தது. ஆனால் அந்த அவசரத்தில் ஒரு சொல் கூடக் கதைக்க

முடியாது என்பது அவளுக்கு விளங்கியது. ஏன் பார்க்கவே முடியவில்லை என்பதே உண்மை. இப்போது நிற்பானா என்கின்ற ஒரு நப்பாசை இருந்தது. ஆனால் கண்ணாடிப் பாதைக்கு வந்தபோது அது நப்பாசை என்பது முழுமையாக விளங்கியது. ஏமாற்றமே. ஆனாலும் அதை அவள் எதிர்பார்த்து இருந்தாள். அதனால் தன்னைச் சமாளித்துக் கொண்டு அவள் தனது ஆராய்ச்சி அலுவலகத்தை நோக்கி நடந்தாள்.

## 4 சுபமுகூர்த்தம்

சாரை சாரையாக மனிதர்கள் கண்ணாடித் தெருவால் பயணித்தார்கள். அதில் கண்ணைப் பறிக்கும் பல அழகுகள். அதில் பல வர்ணங்கள். வடிவுகள். இரசனை இருந்தால் இரசித்துக் கொண்டே இருக்கத் தோன்றும் பாதை அது. கடைத் தெரு போலவே கல கலப்பாய் அது இருக்கும். ஆனால் இங்கு வியாபாரத்திற்கு மனிதர்கள் வருவதில்லை. பலர் வருத்தத்தால் வருகிறார்கள். பலர் வருத்தமானவர்களைப் பராமரிக்க அல்லது பார்க்க வருகிறார்கள். பலர் அந்தப் பெரிய மருத்துவமனை இயங்குவதற்கான மற்றைய அலுவல்களைச் செய்ய வருகிறார்கள். அப்படியாக வருபவர்களில் எத்தினை அழகு? அதற்குப் பால், இனம், நிறம், மொழி என எந்த வேறுபாடும் இருப்பதில்லை. அழகை இரசிக்கும் இரு கண்கள் வேண்டும். அழுக்கற்ற மனதோடு இயற்கையை விளங்கிக் கொள்ள வேண்டும். அவை அனைத்தும் சந்திரனிடம் இருந்தன. அவன் இரசிகன். வேலை செய்து கொண்டே இரசிகனாக வாழும் பாக்கியம் அவனுக்குக் கிடைத்து இருந்தது. அவன் கிடைத்த பாக்கியத்தை துஷ்பிரயோகம் செய்வதில்லை. ஆனால் இப்போது அவனால் அப்படி இரசிகனாக இருக்க முடியவில்லை. அவன் மனது குழம்பிப்போய் இருந்தது. தான் பார்க்க வேண்டியதை மட்டும் மனதில் இருத்தியதால் தன்னை சுற்றி இப்போது கடந்து போகும் அழகுகளை அவன் மறந்து போனான்.

சந்திரன் பார்த்துப் பார்த்துக் களைத்துவிட்டான். அவளை இன்றும் காணவில்லை. இனி அவள் வரமாட்டாள் என்கின்ற

முடிவோடு ஈ பிரிவை நோக்கிச் செல்வதற்காய் வண்டியைத் திருப்பினான். அப்போது கற்பனை நிஜமாவது போல அவள் சீ பிரிவிலிருந்து வந்தாள். சந்திரன் வண்டியை நிறுத்திவிட்டு அப்படியே காத்திருந்தான். அவள் வண்டி அருகே வந்ததும் கதைக்க வேண்டும் என்ற எண்ணத்தோடே முதலில் காத்திருந்தான்.

சந்திரனுக்குத் தான் அப்படி அவளோடு கதைப்பது சரியா என்கின்ற கேள்வி அதையடுத்து எழுந்தது. அவள் ஒரு மருத்துவர். அதிலும் ஆராய்ச்சியாளர் என்று கேள்விப்பட்டான். அப்படியான அவளுக்கும் இந்த வேலை செய்யும் தனக்கும் ஏதாவது பொருத்தம் இருக்கிறதா? இது தப்பான எண்ணமில்லையா? நான் இதைக் கேட்பது முட்டாள்தனம் இல்லையா? அப்படி என்றால் அவளை மறிக்காது அதைப் பற்றி எதுவும் கேட்காது விடுவதே மேல். அதுவே சரியாக இருக்கும். தப்பாகக் கதைத்து அவமானப்படுவது உசிதமானது இல்லை. வேண்டும் என்றால் எதையும் கூறாது தனியே ஒரு வணக்கம் வைத்துவிட்டு எனது வேலையைத் தொடர்வதே சரியாக இருக்கும் என்று எண்ணிச் சந்திரன் குழம்பிய வண்ணம் அவளைப் பார்த்துக் கொண்டு இருந்தான்.

அவள் அருகே வந்தவுடன் வணக்கம் சொல்ல வேண்டும் என்று இருந்தவனுக்கு அவள் அருகே வரவர அதற்கும் தனக்கு நா எழாது என்று தோன்றியது. அவள் அருகே வந்துவிட்டாள். வந்தவள் சந்திரனைப் பார்த்தாள். சந்திரனும் அவளைப் பார்த்தான். சந்திரன் தனது வாயைத் திறக்க முடியாது அவஸ்தைப்பட்டான். அதைப் பார்த்துக் கொண்டு அருகே வந்த அவள் புருவத்தை உயர்த்தி,

'வணக்கம். நீங்கள் வணக்கம் சொல்ல மாட்டியளா?' என்று சந்திரனைப் பார்த்து வில்லங்கத்திற்குக் கேட்டு அவனை எதிர்பாராது அதிர வைத்தாள். அவளாக இதைத் தொடங்குவாள் என்று அவன் எதிர்பார்த்து இருக்கவில்லை. அதனால் அவனுக்கு அது அதிர்ச்சியோடு கூடிய தடுமாற்றமாய் இருந்தது. அப்படியே இருந்தால் அவளை அவமானப்படுத்துவதாய் இருக்கும் என்பதை விளங்கிக் கொண்டு அவன் உடனடியாக,

‘ஐயோ… அப்பிடி எல்லாம் இல்லை. நீங்கள் எல்லாம் எங்களுக்கு வணக்கம் சொல்லுவியள் எண்டு நான் நினைக்க இல்லை. நீங்கள் வணக்கம் சொன்னது எனக்கு ஒரு வகையில அதிர்ச்சிதான். அதிலதான் இப்படி வாயடைச்சுப் போனன்.’ என்றான்.

‘சும்மா நக்கல் எல்லாம் வேண்டாம். தமிழ் ஆட்களைக் கண்டா தமிழ் ஆட்கள் வணக்கம் சொல்லாமல் விடுவாங்களா?’

‘ஏன் இல்லை. அப்படியும் சிலர் போவினம். ஆனா… அனேகமான ஆட்கள் அப்படிச் செய்யமாட்டினம். அது வேறை விஷயம்… அதைவிட நீங்கள் எங்கை நான் எங்கை எண்டு நினைச்சன்?’

‘ஏன் அப்பிடிச் சொல்லுகிறியள்? இது என்ன சிலோனா? டொக்ரர் எண்டா கடவுள் என்டு தலையில தூக்கிவைச்சு கூத்தாடுகிறதுக்கு? இங்கை எல்லாரும் கிட்டத்தட்ட ஒண்டுதான். சின்னச் சின்ன வித்தியாசம் மட்டும் இருக்குது.’

‘அப்படி ஒரு காலத்தில இருந்திச்சுது. இப்ப அதெல்லாம் இங்கையும் மாறித்தான் போச்சுது.’

‘இருக்கலாம். இருந்தாலும் இலங்கை மாதிரி இங்க இல்லைத்தானே?’

‘அது உண்மை. இலங்கையை பல விஷயங்களில இங்க இருக்கிறதோடை ஒப்பிட முடியாது எண்டது உண்மைதான்.’

‘அது சரி நீங்கள் ஊரில எந்த இடம்?’

‘நான் மானிப்பாய். நீங்கள்?’

‘நானும் மானிப்பாய்தான்.’

‘மானிப்பாயில நீங்கள் ஆற்றை மகள்?’

‘நான் சிவம் மாஸ்ற்றறற்றை மகள்.’



 

'ஓ... எனக்கு உங்கடை அப்பா, அம்மா, சொந்தக்காரரை எல்லாம் நல்லாய் தெரியும்.'

'அப்பிடியா? எனக்குத்தான் உங்களை ஞாபகம் இல்லை.'

'நான் வெளிக்கிடேக்க நீங்கள் ஊரில சின்ன ஆட்களாய் இருந்திருப்பியள்.'

'நீங்கள் யார் எண்டு எனக்குச் சொல்லேல்லை.'

'நான் லையிற் என்சின் சதாசிவத்தின்ரை மகன்.'

'ஓ... அப்பிடியா? உங்கடை அப்பாவை எனக்கு நால்லாத் தெரியும்.'

'அவற்றை வேலை அப்பிடி... எங்கையும் விசேசம் எண்டா எஞ்சினோடை அவர் அங்க நிற்பார். அதால எல்லாருக்கும் நல்லாய் அவரைத் தெரியும்.'

'இப்ப எப்பிடி இருக்கிறார்?'

'அவர் இப்ப உயிரோடை இல்லை.'

'ஓ சொறி.'

'பருவாய் இல்லை.'

'சரி நான் போக வேணும். இன்னொரு நாளைக்குக் கதைப்பம். நிறைய வேலை இருக்குது.'

'ஓ சரி கதைப்பம். என்னையும் பாத்துக் கொண்டு திரிவாங்கள்.'

'சரி. சந்திப்பம்.'

'சந்திப்பம்.'

# 5 உணவகத்தில்

அன்று காலை ‘பொர்ஸ்கினிங் வெய்யன்’ என்கின்ற சுரங்கரதத் தரிப்பிடத்தில் இருந்து ‘றிக்ஸ் கொஸ்பிற்றல்’க்கு வரும் போது எதேச்சையாக அவளும் அந்த வண்டியில் வந்ததில் சந்திரனுக்கு ஒரு பெரிய இன்ப அதிர்ச்சி. அவன் அந்தச் சந்தர்ப்பத்தை நழுவவிட விரும்பவில்லை. அதேவேளை அதைப் பெரிதாகவும் காட்டிக்கொள்ளக் கூடாது என்பதும் விளங்கியது. என்றாலும் மனது கேட்காது சந்திரன் அவள் இருந்த இருக்கையை நோக்கிச் சென்றான். அவளும் சந்திரனைக் கண்டுவிட்டு அவனுக்கு இருக்கையில் இடம்விட்டு நகர்ந்து இருந்தாள். அதில் ஒரு வரவேற்பை அவன் உணர்ந்து மனதிற் புளகாங்கிதம் அடைந்தான். இருந்தாலும் அதைக் கமுக்கட்டிற்குள் வைத்துக் கொண்டு,

‘நான் உங்களை இந்தத் திறிக்கில காண்கிறது இல்லையே?’ என்று சந்திரன் கதையைத் தொடக்கினான்.

‘ஓ வழமையா எட்டு மணிக்குத்தான் நான் வேலைக்கு வாறனான். இண்டைக்கு ஒரு முக்கியமான பரிசோதனை காலமை செய்ய வேணும். அதுதான் வெள்ளன வாறன்.’

‘ஓ... அப்பிடியே? நான் வழமையா இதிலதான் வருவன். நாங்கள் வேலை வெள்ளனத் தொடங்கீடுவம். சில இடங்களை மற்றவை வாறத்துக்கு முதல் துப்பரவு செய்ய வேணும்.’

‘ம்... உங்கடை வேலை கஸ்ரம்தான்... இல்லையா?’

‘கஸ்ரம் எண்டால்... உடல் ரீதியான வேலை. அது எப்பவும் முறிவுதானே? அது சிலவேளை அலுப்பா இருக்கும். ஆனா... எனக்குக் கூடுதலா வண்டி ஓட்டுகிற வேலை வரும். அதால ஒரு வகையில அது சொகுசான வேலையா இருக்குது. சிலவேளைக் கொஞ்சம் வேறை வேலையளும் வரும். அப்ப முறிவுதான். உங்கடை வேலை உடம்புக்குக் கஸ்ரம் இல்லாட்டியும் மூளைக்கு நிறைய வேலையா இருக்கும். இல்லையா?’

‘ஓ... அது உண்மை. உங்களுக்கு எப்ப லஞ்ரைம்?’

‘எங்களுக்கு அது பிரச்சனை இல்லை. வசதிபோல எடுக்கலாம்.’

‘ஓ... அப்பிடியே? அப்ப பன்னிரண்டு மணிக்கு ரெஸ்ரூரன்ருக்கு வந்தியள் எண்டா நான் அந்த ரைம் சாப்பிட அங்க வருவன்.’

‘அதுக்கு என்ன? வரலாமே.’

வண்டி தரிப்பிடத்தில் நின்றது.

‘அப்ப சந்திப்பம். பன்னிரண்டு மணிக்கா...’

‘ஓகே. சந்திப்பம்.’

சந்திரனுக்குத் தலை கால் தெரியாத சந்தோசம். அவளே கேட்பாள் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. சுகந்தியோடு ஏற்படும் உறவு எந்தச் சிக்கலும் இல்லாததாய் இருக்கும் என்கின்ற நம்பிக்கை அவனிடம் இருந்தது. முக்கியமாகக் கலியாணம் என்றால் அவள் என்ன சாதி என்பதே இப்போதும் முதற் கேள்வியாக அம்மா கேட்பார் என்பது அவனுக்கு நன்கு தெரியும். அம்மா அதில் எல்லாம் எந்த விட்டுக் கொடுப்பும் செய்து கொள்ளமாட்டார் என்கின்ற உண்மை அவனுக்கு விளங்கும். சுகந்தியும் தனது சாதியாக இருப்பதால் முக்கியமான தலையிடி ஒன்று தொலைந்து போயிற்று என்கின்ற நிம்மதி அவனிடம். மற்றைய விடயங்களைச் சமாளிக்கலாம். இருவருக்கும் ஒத்துப் போனால் இது ஒரு நல்ல முடிவில் முடியும் என்பதில் அவனுக்குப் பெரிய சந்தேகம் எதுவும் இருக்கவில்லை.

சுகந்தி தன்னை விரும்பினால் அது தனது பாக்கியம் என்றே அவனுக்குத் தோன்றியது. படிப்பு வேலை என்பதில் அவளோடு ஏணிவைத்தாலும் எட்டாத பொருத்தம் என்பது அவன் முடிவு. ஏணிவைத்தாலும் என்பதைவிட அவள் அதில் வேறு உலகம், தான் வேறு உலகம் என்று சொல்ல வேண்டுமென நினைத்தான். சாதிக்கு அடுத்ததுப் படிப்பையே பார்ப்பார்கள் என்பது சந்திரனுக்குத் தெரியும். தனது வீட்டிலும் அவள் வீட்டிலும் இதற்கு என்ன சொல்வார்களோ தெரியாது என்பது

அவனது தொடர் அரிக்கும் கவலையாக இருந்தது. அப்படி எந்த இடையூறும் வரக்கூடாது என்கின்ற பிரார்த்தனை அவன் மனதில் எழுந்திற்று. அதே வேளை என்ன சொன்னாலும் அதில் பிடியாக நிற்கலாம் என்பதும் படிப்பு, வசதி என்பன பிரச்சனையாக இருந்தாலும் அவை கடக்க முடியாத பிரச்சனைகள் இல்லை என்பதும் அவனுக்கு விளங்கியது. அதனால் அதை நாம் கடக்கலாம் என்பது அவன் எண்ணமாகியது.

சந்திரனுக்குத் திடீரெனச் சிரிப்பு வந்தது. அவள் சும்மா கதைத்தாள். இன்று கதைப்போம் என்று ஏனோ கேட்டாள். அதற்குள் எப்படி நான் இப்படிக் கற்பனை செய்ய முடியும்? நான் ஏன் இப்படிக் கற்பனை செய்கிறேன்? என்று எண்ணிச் சிரித்த வண்ணம் அவன் சென்றான். சந்திரன் சிரித்துக் கொண்டு வருவதைப் பார்த்த முகமட்,

'வா சம் சேர் மே டை?' உனக்குள் என்ன நடக்கிறது? என்று கேட்டான்.

'இக்க நூவ.' ஒண்டும் இல்லை.

'எய் துறுறுர் இக்க.' நான் நம்ப இல்லை.

சந்திரன் அதற்குப் பதில் அளிக்கவில்லை. அவன் சிரித்துக் கொண்டு வண்டியை நோக்கிச் சென்றான்.

*

வேலை செய்யத் தொடங்கிய சந்திரனுக்கு வேலை ஓடவில்லை. மனது வேலையை விட்டு வேறு எங்கெங்கோ தாவியது. எப்போது பன்னிரண்டு மணியாகும் என்கின்ற ஏக்கம் அவனை வாட்டியது. அவளும் இப்படியே எதிர்பார்ப்பாளா என்கின்ற கேள்வி மனதுள் எழுந்தது. நிச்சயமாக என்கின்ற எண்ணம் அவனிடம் அதற்குப் பதிலாக வந்தது. ஆனால் நேரம் போகவில்லையே என்கின்ற கவலை அவனை வாட்டியது. அதற்கு இடையில் பொறுப்பான அதிகாரி வந்து மூன்றாவது மாடியில் அவசரமாக சில பகுதிகளைத் துப்பரவு செய்ய வேண்டும் என்று கூறினாள். நேரம் இருந்தது. என்றாலும் இது என்ன புது வேலை என்கின்ற சலிப்பும் அதை மீறி வந்தது.

இருந்தும் இப்போது தேவை இல்லாத கதை வேண்டாம் என்றுவிட்டு அவன் அங்கே சென்றான். அதை முடித்துவிட்டுத் திரும்பும் பொழுது பதினொன்று ஐம்பதாகப் போய்விட்டது. சந்திரன் விரைவாகச் சென்று தான் சாப்பிடப் போவதாய் கூறிவிட்டுச் சாப்பிடச் சென்றான். வழமையாக அவன் சாப்பாடு கொண்டு வந்தே சாப்பிடுவான். இன்றும் சாப்பாடு கட்டி வந்திருந்தான். இருந்தாலும் அவன் அதை எடுத்துக் கொண்டு செல்லவில்லை. இன்று அதற்குப் புறநடை என்றுவிட்டு வேகமாகச் சென்றான். அவன் மனதில் திருவிழாவிற்குப் போகும் குழந்தையின் பரபரப்பு. இனம் தெரியாத சந்தோசம் இழுத்துச் செல்வதான உணர்வு. சொற்கத்துக்குப் பற்றுச்சீட்டுக் கிடைத்த மாதிரியான மகிழ்வு அவனிடம். அவன் மிகவும் வேகமாகச் சென்றான். அவள் வந்து காத்திருப்பாளோ என்கின்ற பதைபதைப்பு அவனிடம்.

அவன் அங்கே வந்த போது அவன் நினைத்தது போலவே அவள் வாசலில் காத்துக் கொண்டு நின்றாள். உள்ளே சென்று அவள் அமர்ந்து இருக்கலாம். உள்ளே சென்றால் எங்கே இருக்கிறாள் என்பதைக் கண்டுபிடிப்பது இலகு அல்ல. அது பரந்த தேசம். அங்கே எவ்விடத்தில் இருக்கிறாள் என்பதைக் கண்டுபடிப்பது ஆற்றில் போட்டுக் குளத்தில் தேடுவது போன்றதாகும் என்பது அவனுக்கு நன்கு தெரியும். அதனால் அவள் அங்கே நின்றது அவனுக்குப் பெரும் நிம்மதியையும் சந்தோசத்தையும் தந்தது. சுகந்தியும் சந்திரனைக் கண்டு அப்போது மலரும் அல்லி போலத் தனது வதனத்தை மலர்த்தினாள். அந்த மலர்வு அவன் மனதைக் குளிரப் பண்ணியதோடு ஒருவித துணிவையும் அவனுள் தந்தது. அவன் அவளைப் பார்த்து,

‘கன்நேரமே வந்து?’ என்றான்.

‘இல்லை. இப்பதான் வந்தனான். வாங்க உள்ள போவம்.’ என்றாள்.

‘ஓ.கே வாங்க.’

இருவருமாகச் சென்று முதலில் தங்களுக்கு உணவு வாங்கினார்கள்.

சுகந்தி தனக்கு ‘சலாற்’ எடுத்தாள். அத்தோடு குடிப்பதற்கு ஆப்பிள் பழரசம் எடுத்துக் கொண்டாள். சந்திரன் தனக்கு ‘ஸ்பாகெட்டி’-யும் குடிப்பதற்குக் கோப்பியும் எடுத்துக் கொண்டான். பின்பு இருவருமாகச் சென்று அமைதி கிடைக்கும் என்று ஒதுக்குப்புறமாக இருந்தார்கள். ஒதுக்குப்புறம் என்றாலும் சத்தத்திற்கு ஏது எல்லை? அது எங்கும் பிரசன்னம். அதன் பிரசன்னத்தையும் தாண்டித் தாங்கள் கதைக்க வேண்டும் என்று எண்ணினார்கள்.

மேசையிலிருந்தவுடன்,

‘உங்களுக்குச் சலாத்தான் பிடிக்குமா?’ என்று சுகந்தியைப் பார்த்துச் சந்திரன் கேட்டான்.

‘ஓ லஞ்சிற்கு இப்பிடி ஏதும் லையிற்றாத்தான் சாப்பிடுவன். பிறகு வீட்டை போய் சோறு சாப்பிடத்தானே வேணும்? அதுதான் என்னுடைய முக்கியமான சாப்பாடு.’

‘எனக்கு மூண்டு நேரமும் முறையா வேணும்.’

‘அதுதான் உங்களைப் பார்க்கவே தெரியுது. ஆனா... உங்கடை வேலைக்கு அது பெரிசாத் தாக்காது. எங்கடை வேலை உங்களை மாதிரி உடம்பை முறிக்காமல் செய்கிற வேலை எண்டதால சாப்பாடும் அப்பிடிதான் இருக்க வேணும். நான் இடைக்கிடை உடற்பயிற்சியும் செய்வன். அதால உடம்பைக் கொன்றோலா வைச்சிருக்லாம் எண்டு நினைக்கிறன்.’

‘ம்... கவனமா இருக்கிறியள். நான் அந்த அளவுக்குக் கவனம் இல்லை. வேலை சிலவேளைச் சுகமாய் இருக்கும். சிலவேளைக் கஸ்ரமாய் இருக்கும். வீட்டை போகேக்கையே எனக்கு அலுப்பா இருக்கும். அதுக்குப் பிறகு சாப்பிட்டா கண்ணைச் செமிட்டும். பிறகு நித்திரையால எழும்பினா இரவாகிடும். அதுக்குப் பிறகு எங்கை உடற்பயிற்சி எல்லாம் செய்யமுடியும்?’

‘ஏன் வேலைக்குச் சைக்கிளில வந்து போகலாம்தானே?’

‘இவ்வளவு தூரத்தையுமா?’



 

'பாதித்தூரத்திற்கு... பிறகு பாதித்தூரத்திற்குத் தேவாண்ணில ஏத்திக்கொண்டு போகலாம்தானே?'

'உங்கடை ஐடியாவும் நல்லாகத்தான் இருக்குது. ஆனா அதே நேரம் வேலையால போகேக்க நடந்து போகிறதும் சுகமாக இருக்கும். அலுப்பில மனம் கேட்கிறேல்லை. ஆனா... இனிமேலைக்கு அப்படிச் செய்ய வேண்டி வரப்போகுது போல இருக்குது... அப்பிடியே?'

'என்னை ஏன் அப்பிடிக் கேட்கிறியள்?'

'ஓ... நான் சும்மா சொன்னன்.' என்று கூறிச் சந்திரன் சிரித்தான்.

'சரி... அப்ப சொல்லுங்க...'

'நீங்கதான் சொல்ல வேணும். நீங்கதான் லஞ் சாப்பிடலாம் எண்டு சொன்னியள். அப்ப நீங்கள் முதல்ல தொடங்கிறதுதான் முறை.'

'இதுக்கு வேறை முறையா? நீங்க ஆம்பிளை... அதை முதல்ல மறக்கக் கூடாது. அதால நீங்க முதல்ல தொடங்கிறதே சரி எண்டு நான் நினைக்கிறன்.'

'இங்க வந்தும் இது எல்லாம் பார்க்கிறியளா? அதுவும் ஆண் பெண் சமத்துவம் ததும்பி வழியிற இந்த நாட்டில நீங்கள் இப்பிடிக் கதைக்கலாமா?'

'அது எனக்கும் தெரியும். நான் பொதுவா அப்பிடிப் பார்க்கிறேல்லை. அதில பெரிசா எனக்குச் சம்மதமும் இல்லை. இருந்தாலும் இப்ப அது எனக்கு வசதியா இருக்குது. என்னதான் புரட்சி மனதில இருந்தாலும் காலகாலமாய் எங்களுக்கு ஊட்டி வளர்த்ததை லேசில விட இயலாது தானே?'

‘அது உண்மைதான். எண்டாலும் நீங்கள் டொக்ரர். பெரிசா வெட்கப்படாமல் நேரடியாக் கதைப்பியள் எண்டு எனக்கு ஒரு எதிர்பார்ப்பு இருந்திச்சுது.’

‘ம். இப்பிடியே யார் தொடங்கிறது எண்டு கதைச்சுக் கொண்டு இருக்கிறதிலயே எங்கடை லஞ்ரைம் முடிஞ்சு போயிடும்.’

‘அதெண்டா உண்மை. நீங்கள் ஒண்டு செய்யுங்க. உங்கடை நம்பர், வாட்சப் நம்பர் இரண்டையும் தாங்க.’

‘நான் இரண்டுக்கும் ஒரு நம்பரைத்தான் பாவிக்கிறனான். நீங்கள் வித்தியாசம் வித்தியாசமாய் வைச்சிருக்கிறியள் போல இருக்குது.’

‘ஐயோ... அப்பிடி எல்லாம் இல்லை. சிலர் அப்பிடியும் வைச்சிருக்கினம்தானே? அதால கேட்டன். உங்களுக்கு அது பிடிக்காட்டிச் சொறி.’

‘பருவாய் இல்லை... நான் சும்மாதான் சொன்னான். என்ரை நம்பர்...’ அவள் எண்களைக் கூறினாள்.

‘வாவ்... நல்ல நம்பர். கொஞ்சம் பொருங்க... நான் இதை முதல்ல என்ரை போனில பதியிறன்.’

‘சரி பதியுங்க.’

‘என்னுடைய நம்பர்.’ அவன் தனது எண்களைக் கூறினான்.

‘ம்.’

அவள் விரைவாகப் பதிந்தாள். சந்திரனின் அலைபேசியில் வாட்சப் கலோ சொல்லியது. சந்திரன் அதை ஏற்றுக் கொண்டு கலோ கூறினான். அதனால் எப்போதும் சுதந்திரமாகத் தகவல் பரிமாறிக் கொள்ளும் ஒரு கதவு சட்டெனத் திறந்தது.

‘இனி நாங்கள் எப்பவும் கதைக்கலாம். நல்ல வசதிதான் இது.’

‘இப்ப மொபைல்ல இருந்து கதைக்கிறதும் பிறிதானே. நான் அப்படித்தான் ஒண்டு எடுத்து வைச்சிருக்கிறன்.’

‘என்னிட்டையும் அப்பிடி ஒண்டுதான் இருக்குது. ஆனா வாட்சப் எண்டா போட்டோ, வீடியோ எண்டு லைவா பார்க்கலாம்.’

‘அதுதான் நாங்கள் இங்க வேலை செய்கிற இடத்திலையும் அடிக்கடி பார்க்கலாமே?’

‘அது உண்மை. அது சரி நாங்கள் ஏன் அடிக்கடி பார்க்க வேணும்?’

‘விடிய விடிய இராமாயணம்... விடிஞ்சப்பிறகு இராமர் சீதைக்கு என்ன முறை எண்டு கேட்கிற மாதிரி இருக்குது இது. நான் ஒண்டும் உங்களைக் கட்டாயப்படுத்த மாட்டன். நீங்கள் விரும்பியே லஞ் சாப்பிட வந்தனியள் எண்டு நினைக்கிறன்.’

அவள் அதற்குப் பதில் சொல்லவில்லை. ஆனால் கொடுப்பிற்குள் சிரித்தாள். அதன் அர்த்தம் என்ன என்பது சந்திரனுக்கு விளங்கியது. அவனும் சிரித்தான். நேரம் நெருங்கிக் கொண்டு இருந்தது. பிடித்தவர்களோடு இருக்கும் போது நேரம் பிடிக்காத வேகத்தில் கரைந்துவிடும். அப்படியே சந்திரன் எண்ணினான். ‘இப்போது வந்தது போல இருக்கிறது... ஆனால் நேரம் போய்விட்டது... ’ என்பதில் அவனுக்குக் கவலையாக இருந்தது. ஆனால் சுகந்தியோடு இவ்வளவு நேரமும் செலவு செய்ததில் மிகவும் மகிழ்வாய் இருந்தது.

‘என்ன யோசிக்கிறியள்?’

‘இல்ல லஞ்சை இன்னும் அரை மணித்தியாலம் நீட்டிப்பமா?’

‘எனக்கும் விருப்பம்தான்... ஆனா நிறைய வேலை இருக்குது. முக்கியமான ஆராய்ச்சி ஒண்டில நான் இப்ப வேலை செய்கிறன். அதை நிறையக் கவனிக்க வேணும். அதால நான் போகவேண்டியது கட்டாயம்.’

‘பருவாய் இல்லை. நீங்கள் இப்ப போங்க. நாளைக்கு இதே நேரம் லஞ்சிற்குச் சந்திப்பமா?’

‘நிச்சயமா. அப்ப நான் வாறன்.’

‘நானும் வாறன். இனி இங்க இருந்து என்ன செய்யப் போகிறன்?’

என்று கூறிச் சந்திரனும் சிரித்த வண்ணம் எழுந்தான்.

## 6 காலநதியில்

அடுத்த நாள் சந்திக்கும் திருப்தி உடன் சுகந்தி தனது ஆராய்ச்சி மையத்திற்குச் சென்றாள். அதே மகிழ்வோடு சந்திரனும் தனது மீதி வேலையைப் பார்க்கச் சென்றான். இந்தக் கணத்தை விட்டால் எந்தக் கணமும் எம்வசப்படாத மாயையான இவ்வுலக மனித வாழ்வு. அந்தக் கணங்கள் ஒன்றில் ஏற்கனவே அழிந்து இருக்கலாம் அல்லது அது வராமலே போகலாம். சில வேளை அப்படியே வரலாம். அதற்காக யாரும் வாழாமல் இருக்க முடியாது. வாழ்வு இப்படி மட்டுமே அமைய வேண்டும் என்றும் அடம்பிடிக்கவும் முடியாது. இந்த உலக மாயை பற்றி எல்லாம் சந்திரனுக்கு எந்தக் கவலையும் இல்லை. நாளை வரும். சுகந்தி சுகந்தமாக வருவாள் என்கின்ற இவ்வுலகத் துள்ளலுடன் மீதி வேலையைத் தொடங்கினான்.

*

வேலை வீடு என்று காலம் போகத் தொடங்கினால் காலத்தோடு போட்டிப் போடுவது குதிரையில் போபவனைக் கழுதையில் போய் பிடிப்பது போல இருக்கும். அவள் நினைவு சந்திரன் மனதை அரித்தாலும் இரவு எப்படிப் போய் விடியல் எப்படி வந்தது என்று அவனுக்குத் தெரியாது. அவன் வழமை போல சுரங்கரதத்தில் வந்தான். அதில் ஏறும் பொழுது அவளும் வந்தால் நன்றாக இருக்கும் என்பது அவன் நினைவு. அவன்

நினைவு கனவாகியது. அவளை அதில் காணவில்லை. அது அவனுக்குச் சிறிது ஏமாற்றத்தைக் கொடுத்தது. என்றாலும் அவள் வழமையாகத் தொடர்ந்து இதில் வருவதில்லை. அதைப் போல அவள் இன்றும் வரவில்லை என்று தனக்குள் சமாதானம் செய்து கொண்டு அவன் வேலைத்தளத்திற்குள் புகுந்தான். அங்கே சென்ற பின்பு அவனால் தொடர்ந்தும் அவளை நினைத்துக் கொண்டு இருக்க முடியவில்லை. அவன் வழமை போலத் தனது வேலையைத் தொடங்கினான். அதன் பின்பு அவள் நினைவு இடைக்கிடையே வந்தாலும் வேலைப்பழு இன்று அதிகமாக இருந்ததால் நேரம் விண்ணில் போகும் கற்பனைக் குதிரையாக விரைவு காட்டியது. பதினொரு மணி போல் அலைபேசியை எடுத்துப் பார்த்தான். அதில் ஒரு வாட்சப் செய்தி வந்து இருந்தது. என்ன என்று எடுத்துப் பார்த்தான். அதில் இன்று வேலை அதிகமாக இருப்பதால் தாங்கள் பலர் தொடர்ந்தும் வேலை செய்ய வேண்டி இருப்பதாகவும், இன்று மதியச் சாப்பாட்டிற்குத் தன்னால் வரமுடியாது என்றும், நாளை கட்டாயம் வருவதாயும் செய்தி அனுப்பி இருந்தாள். சந்திரனுக்கு முதலில் ஏமாற்றமாய் இருந்தது. பின்பு தடுமாற்றமாய் இருந்தது. இவள் உண்மையில் இதைத் தொடர விரும்புகிறாளா அல்லது இது ஒரு பொழுது போக்கா? சில வேளை அவளுக்கு இதில் விருப்பம் இல்லையா? அதனாலேயே வராது இப்படிச் சாட்டுச் சொல்லுகிறாளா? அப்படியே இருக்க வேண்டும். அவளின் படிப்பிற்கும் வேலைக்கும் என்னுடைய படிப்பிற்கும் வேலைக்கும் சரிவராது என்று நினைத்திருப்பாள். அவள் நினைக்காவிட்டாலும் யாரோடாவது கதைத்திருந்தால் அவர்கள் அப்படிச் சொல்லி இருப்பார்கள். அவளிடம் இருப்பது மனம். சித்தம் அல்ல. அது கலங்கி இருக்கும். இது எதிர்பார்த்ததே. இதற்காக எல்லாம் கவலைப்பட முடியாது. இப்படி ஆயிரம் வருகிறது. ஆயிரம் போகிறது. அதற்காக எல்லாம் கவலைப்பட்டுக் கொண்டு இருக்க முடியாது. என்று எண்ணியவன் நேரத்தைப் பார்த்தான். மதியச் சாப்பாட்டிற்கான நேரம் ஆகிவிட்டது. நல்ல காலம் சாப்பாட்டைக் கட்டிக் கொண்டு வந்தது. அல்லது அதற்கும் வீண்செலவு ஏற்பட்டிருக்கும் என்று எண்ணிய வண்ணம் அவன் சாப்பிடப் புறப்பட்டான்.

*

மனித வாழ்வில் எதிர்பார்த்தது எல்லாம் நடந்து விடுவது இல்லை. அப்படி நடந்தால் வாழ்வில் எந்தச் சுவாரசியமும் இருக்காது. வாழ்க்கை என்பதே எப்படி அது நாளை இருக்கும் என்பது முழுமையாக மனிதனுக்கு விளங்காததில் புதைந்து கிடக்கிறது. அதை விளங்கிக் கொண்டதாய் பலர் நினைக்கிறார்கள். அது நினைவு அல்லக் கனவு என்கின்ற ஞானம் சிலருக்கு மட்டுமே விரைவாக அனுபவமாய் கிடைக்கும். பலருக்கு நீண்ட காலத்தில் மட்டுமே அது தித்திக்கும். சந்திரனுக்கு அந்த ஞானம் விரைவாகக் கிட்டியதான உணர்வு. தான் நினைத்தது போல வாழ்க்கை அமையாது என்பதும், அது அமைவது போல அதை ஏற்றுக் கொள்வோம் என்கின்ற சமாதானமும், சீ இந்தப் பழம் புளிக்கும் என்பது போல அவனுக்கு வந்திருந்தது.

இருந்தும் சுகந்தி சிலவேளை அடுத்த நாள் சந்திப்பாள் என்கின்ற எதிர்பார்ப்பு அவனிடம் இருந்தது. ஆனால் அது நடக்கவில்லை. அதன் பின்பே இந்த ஞானம் இன்னும் வலுவானது. அதன் பின்பு அவன் அவளைப் பற்றிச் சிந்திப்பதைக் குறைக்க வேண்டும் என்று எண்ணினான். அதற்கு மாறாக அவளைப் பற்றிய சிந்தனை அவனுக்குக் கட்டுப்படாது அதிகமாகியது. அவனுடைய வேலைக்கு அது இடைஞ்சலாக இருப்பது அவனுக்குக் கோபத்தையும் வெறுப்பையும் தந்தது. மனது அதைத் தருவது பற்றிக் கோபம் வந்தாலும் அவள் மீது இன்னும் அவனுக்கு ஒருவித மோகம் அடங்காது கிடந்து துடித்தது. எது எப்படி இருந்தாலும் அவள் அலைபேசியில் தொடர்பு கொண்டு இருக்கலாம். அவள் ஏன் அப்படிச் செய்யவில்லை என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவளுக்கு தானே தொடர்பு கொண்டு கேட்பதற்கு விருப்பமாக இருந்தாலும் அப்படிச் செய்தால் அவள் தன்னை மிகவும் மட்டமாக நினைப்பாள் என்கின்ற எண்ணத்தினால் அவன் இதுவரை அப்படிச் செய்யவில்லை. ஆனால் இனியும் அப்படிக் கௌரவம் பார்க்க வேண்டுமா என்கின்ற கேள்வி அவனிடம் இப்போது எழுந்தது. அவன் அலை பேசியை எடுத்து அவள் எண்ணுடன் தொடர்பு கொண்டான். அப்போது அவனுக்கு மீண்டும் ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. அதில் அவனுக்குக் கிடைத்த தகவல் அவள் தொடர்பு எல்லையில் இல்லை என்கின்ற தகவல் மட்டுமே. அது மேலும் அவனுக்கு வேதனையைத் தந்தது. அவன் வெறுப்போடு அலைபேசியைப் பார்த்தான். அதைத் தூக்கி எறிய வேண்டும் போல் இருந்தாலும் அவன் அப்படிச்

செய்யவில்லை. அது ஒரு ஐபோன். அதைச் சுழற்றி எறியும் கற்பனாவாதி அவன் இல்லை. மெதுவாக அதை அவன் பத்திரப்படுத்திக் கொண்டு தனது வேலையைக் கவனித்தான். அதன் பின்பு அவன் ஒருவாறு அவளை மறந்து வேலையில் ஒன்றினான். அதிசயம் சொல்லிக்கொண்டு வருவதில்லை. அதுவும் அப்படியே நடந்தது. இல்லை நடந்து வந்தது. அதுவும் இவனை நோக்கி நடந்து வந்தது. இவனுக்கு முதலில் திகைப்பாக இருந்தது. பின்பு இன்ப அதிர்ச்சியாக மலர்ந்தது. அவன் ஆர்வமாகப் பார்த்துக் கொண்டு நின்றான்.

இவ்வளவு நேரம் இருந்த சோகம், சினம், ஏமாற்றம், தோல்வி போன்றவை அவனைவிட்டு ஓட புதுவித உயிர்ப்புச் சக்தி உடல் மீது ஏறியது போன்று இருந்தது. பூஞ்சலான அவன் கண்கள் சூரியனைத் தூக்கி அதற்குள் வைத்தது போலப் பிரகாசித்தன. வதனத்தில் ஆயிரம் ஆயிரம் புன்னகைப் பூக்கள் அழகாக மலர்ந்து மகிழ்வைக் காட்டியது. இருந்தாலும் ஒரு தவிப்பு. ஏன் இவள் அன்று வராது விட்டாள்? இப்போது என்ன சொல்லப் போகிறாள்? என்கின்ற பல கேள்விகள் மனதைக் குடையும் மகத்தான தவிப்பாக இன்னும் அடங்காது அரித்தது. சரி அவளோடு கதைத்தால் எல்லாம் தெரிந்து கொள்ளலாம் என்று அவள் கடக்க வேண்டிய கணத்திற்காய் அவன் காத்திருந்தான். வந்தவள் ஆர்வத்தோடு தானே திருவாய் மலர்ந்தருளினாள்.

‘என்ன கடுமையான வேலை போல இருக்குது?’

‘எனக்குக் கடுமையான வேலையோ இல்லையோ. உங்களுக்கு நேரம் இல்லை போல... விரு...’

‘சொல்லுங்க...’

‘சீ வேண்டாம் விடுங்க...’

‘நீங்க சொன்னாத் தொடர்ந்து கதைக்கலாம்...’

‘இல்லை உங்களுக்குப் போன் பண்ணினன். தொடர்பு எல்லையில் இல்லை எண்டுச்சுது. அதுதான் நீங்கள் எனக்குத் தூரத்தில நிக்கிறியள் எண்டிட்டு விட்டிட்டன்.’

‘நீங்கள்தான் தூரத்தில நிக்கிறியள். நான் போன் பண்ணாமல் இருக்கிறது எண்டா அதுக்கு ஒரு காரணம் இருக்கத்தானே செய்யும். அதை யோசிக்க மாட்டியளா?’

‘அஙா... அப்பிடி என்ன காரணம்? நாங்களும் தெரிஞ்சு கொள்ளலாமா?’

‘நீங்கள்தான் நம்பேல்லையே... பிறகு என்னத்துக்கு உங்களுக்கு அதைச் சொல்லுகிறது? உறவுக்கு அடிப்படையே நம்பிக்கைதான். அது இல்லை எண்டாக் கதைக்கிறதே வேஸ்ற்.’

‘நீங்கள் சொல்லுகிறது சரி. உறவுக்கு அடிப்படையே நம்பிக்கைதான். சொறி. தயவு செய்து இப்ப உங்கடை காரணத்தைச் சொல்லுங்க.’

‘என்னுடைய ரெலிபோன் தவறுதலா தண்ணீக்க விழுந்து போச்சுது. நான் என்ன செய்ய முடியும்? நேற்று மத்தியானம் நான் இங்க வந்து உங்களைத் தேடிப் பார்த்தன். உங்களைக் காணேல்லை. புறபசர் ஒரு வேலையை முடிக்கவேணும் எண்டு என்னோடை நிண்டு கொண்டார். அப்ப நான் எப்பிடி அடிக்கடி வரமுடியும்? அதாலதான் வரமுடிய இல்லை. அப்பிடிக்கூட நான் வரேக்க நீங்க இல்லை. நிண்டிருந்தா அப்பவே அதைச் சொல்லி இருப்பன்.’

‘ஓ.கே... ஓ.கே... நான் ஒத்துக்கொள்ளுகிறன். சொறி.’

‘பருவாய் இல்லை. இண்டைக்கு லஞ்ரைம் சந்திப்பம்.’

‘ம்... மறந்திடாதேங்க.’

‘ம்… புதுப் போன்.’

அவள் அலைபேசியைக் காட்டினாள். பின்பு அவனைப் பார்த்து,

‘திரும்ப ஒருக்கா உங்கடை நம்பரைச் சொல்லுங்க.’ என்றாள்.

‘ஓ...’ அவன் மீண்டும் எண்களைக் கூறினான்.

‘தாங்ஸ்.’

‘சரி நான் அப்ப வாறன்.’

‘மறந்திடாமல் லஞ்சிற்கு வாங்க.’

‘நிச்சயம்.’

அவள் சிரித்துக்கொண்டு சென்றாள். சந்திரனுக்கு மனம் குளிர்ந்து அமைதியாகியது. அவள் சொன்னதில் அர்த்தம் உள்ளதாகவே தோன்றியது. நம்பிக்கையே உறவுக்கு அடிப்படை. அது இல்லாவிட்டால் எந்த உறவும் நிலைக்காது. உறவில் உள்ள நம்பிக்கையை உரமான நிரூபணமாகும் காரணம் இல்லாது கைவிடக்கூடாது. அந்த உண்மை இன்று சந்திரனுக்கு முழுமையாக விளங்கியது. அவன் சுகந்தியைக் காணவில்லை என்றாலும் பொறுத்திருப்பான். ஆனால் அலைபேசியில் தொடர்பு கொள்ள முடியவில்லை என்றவுடனேயே அவனது மனது கலவரம் அடைந்து விட்டது. இனியாவது தான் கவனமாக இருக்க வேண்டும் என்று எண்ணினான். எந்தச் சந்தர்ப்பத்திலும் நிரூபணமாகாது சொற்களை இளக்கக்கூடாது. அப்படிச் செய்தால் இப்படி தலை குனிய வேண்டி வரும் என்கின்ற உண்மை அவனுக்கு விரிவாக விளங்கியது.

சந்திரனால் மேற்கொண்டு அங்கு நின்று சிந்திக்க முடியவில்லை. ஒன்று வேலையைப் பார்க்க வேண்டும். வேலை செய்யும் போது கவனமாக இருக்க வேண்டும். மனிதர்களில் இயந்திரம் உரசிவிட்டால் அவ்வளவே. வேலையும் போய் அதனால் வாழ்வும் போய்விடும். அந்த உண்மை விளங்கினவனாய் தனது கவனத்தை வேலையில் செலுத்தத் தொடங்கினான். அதன் பின்பு எப்படி நேரம் போனதோ அவனுக்குத் தெரியவில்லை. மற்றைய பகுதிக்குச் செல்ல வேண்டிய நேரம் வந்துவிட்டது. தனது இயந்திரத்தை அவன் திருப்பினான்.

## 7 காதலாகி

மதியச் சாப்பாட்டிற்குச் சொல்லி வைத்தது போலவே சுகந்தி வந்திருந்தாள். சந்திரனும் அப்படியே வந்ததில் அவளுக்கு மாரி நதியாகப் பாயும் சந்தோசம். சாப்பாட்டை எடுத்துக் கொண்டு அவர்கள் அமைதியான இடம் பார்த்தார்கள். அமைதிக்கும் அந்த உணவகத்திற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. ஒருவாறு சுவரோரமாக இருந்த மேசை ஒன்றில் அவர்கள் அமர்ந்தனர். அதன் பின்பு சுகந்தி அவனைப் பார்த்து,

'நீங்க ஏன் இவ்வளவு காலமும் தனியா இருந்தனியள்?' என்று கேட்டாள்.

'உங்களைப் பார்க்க வேணும் எண்டு விதி இருந்திருக்க வேணும்.'

'பகிடியை விடுங்க... உண்மையான காரணத்தைச் சொல்லுங்க.' என்று கூறி அவள் கண்ணைச் சிமிட்டிச் சிரித்தாள்.

'இல்லை... நிறைய வீட்டுப் பிரச்சனைகள் இருந்திச்சுது. அதோடை அது இது எண்டு ஏதாவது ஒரு காரணம் வந்து தட்டிக் கழிச்சுக் கொண்டே போயிட்டுது. இனியும் இப்பிடியே இருந்தா கடைசிவரையும் தனிய இருக்க வேண்டி வந்திடும் எண்டுகிற ஒரு பயமும் இப்ப நிறைய வந்திருக்குது. அதுக்கு எல்லாம் ஒரு வழியைக் கண்டு பிடிக்க வேணும் தானே?'

'அப்ப தனிய இருக்க வேணும் எண்டுகிற பயத்திலதான் என்னோடை கதைக்கிறியள் எண்டுறீங்களா?'

'அப்படி மடக்காதீங்க... பயத்தில கதை வராது எண்டு நினைக்கிறியளா? அது சரி… நீங்கள் ஏன் இவ்வளவு காலமும் இப்பிடியே இருந்திட்டியள்? அதைச் சொல்லுங்க பாப்பம்?'

'கதையை மாத்தாதீங்க... எனக்குக் கலியாணத்தைப் பற்றி நினைக்கவே நேரம் கிடைக்க இல்லை.'

'படிப்பில அவ்வளவு விசியா?'

'முதல் இலட்சியத்தில... பிறகு படிப்பில... அப்பிடியே காலம் போயிட்டுது.'

'விளங்கேல்லை. படிப்புச் சரி... அது என்ன இலட்சியம்? படிப்புத்தானே இலட்சியம்? இல்லையே?'

'அப்பிடி இல்லை.'

'அப்பிடி எண்டா?'

'சரியாச் சொல்லுகிறது எண்டா முதல்ல படிப்பு. பிறகு இலட்சியம். அதுக்குப் பிறகு எல்லாம் முடிஞ்சு படிப்பு... ஆராய்ச்சி...'

'எனக்குச் சாதுவா விளங்குது. இருந்தாலும் நீங்கள் குழப்பாமல் விபரமாய் சொல்லுங்க.'

சந்திரனுக்கு யோசனையாக இருந்தது. ஊர், அம்மா என்று பலவும் வந்து போனது. எதற்கு இந்த யோசினை? அவளே சொல்லட்டும் என்று அவள் முகத்தைப் பார்த்தான். அவள் சிறிது அமைதியாக இருந்தாள். பின்பு எதையோ முடிவு செய்தவள் போல,

'முதல்ல எனக்கு யாழ்ப்பாணம் கம்பஸ் கிடைச்சுப் போனன். அப்பதான் நாட்டுப் பிரச்சனை உச்சத்தில இருந்திச்சுது. நாங்கள் திண்ணவேலியில வீடு ஒண்டு எடுத்து ஆறு பொம்பிளைப் பிள்ளையள் இருந்து படிச்சம். அதில ஒருத்திக்கு குமுதன் எண்டுகிற புலியோடை காதல். அதுவும் வெளிப்படையாகச் செய்ய முடியாத காதல். அவர் காதலைவிட இயக்கம், போராட்டம், அதுகின்ரை முக்கியத்துவம் எண்டதைப் பற்றி விவரிக்கிறதுக்கு நிறைய நேரம் செலவு செய்வார். அவருக்கும் கம்பஸ் கிடைச்சு அதை விட்டிட்டுத்தான் இயக்கத்துக்குப் போயிருந்தார். இப்பிடியே இதை எல்லாம் கேட்கக் கேட்க நாங்கள் எல்லாம் உணர்ச்சியே இல்லாத சுயநலம் பிடிச்ச ஜடங்களா வாழ்கிறதா எண்டு எனக்கு உள்ளேயும் ஒரு கேள்வி எழுந்திச்சுது. அது சுடராகி அணைய மறுத்திச்சுது. அதுக்குப் பதிலாக அது காட்டுத் தீயாட்டம் மனதை எல்லாம் தின்னத் தொடங்கீட்டுது. அதே நேரம்

எங்கடை குடும்பம்... அதுகின்ரை கௌரவம், கட்டப்பாடு எண்டுகிற பயமும் அதுக்குத் தடை போடப் பார்த்திச்சுது. ஆனாலும் கொடுமைகளைப் பார்க்கப் பார்க்க... கோரங்களைக் கேட்கக் கேட்க எந்தப் பிரயோசனமும் இல்லாமல் அவங்களுக்குப் பலியாகிறதிலும் ஏதாவது செய்து போட்டுச் சாகலாம் எண்டுகிற மாதிரி மனது திரும்பீட்டுது. பிறகு என்ன குமுதன்தானே மிச்சத்துக்கு இருந்தார். நான் அவருடைய லவ்வர் வினோ, தேவகி, மாலினி எண்டு இன்னும் இரண்டு பொம்பிளைப் பிள்ளையள் எண்டு எல்லாரும் படிப்பை விட்டிட்டு றெயினிங் செய்ய வன்னிக்குப் போனம்.'

இதைச் சொல்லி முடிக்கும்போது சுகந்தியின் கண்கள் கலங்கி இருந்தன. அதைப் பார்க்கச் சந்திரனுக்குச் சங்கடமாய் இருந்தது. அவன் பேசாது அமைதி காத்தான். அவளும் சிறிது நேரம் மௌனம் காத்தாள். பின்பு,

'இயக்கத்திற்குப் போனது சரி எண்டுகிறதில எனக்கு எந்தச் சந்தேகமும் கிடையாது. ஆனா... கடைசியில இப்பிடிப் போராட்டம் முடியும் எண்டும், அதில நாங்கள் எல்லாத்தையும் இழக்க வேண்டி வரும் எண்டும் நான் ஒரு நாளும் எதிர்பார்த்து இருக்க இல்லை.'

சுகந்தி என்ன நினைத்தாளோ கண்களால் பளிங்கு முத்துக்கள் வழியக் கைகளால் அவசரமாக அவள் முகத்தைப் பொத்திக் கொண்டாள். இருந்தும் அவள் விசும்பல் அவனுக்குக் கேட்டது. எதனால் இது என்பதை அவனால் முழுமையாக விளங்கிக் கொள்ள முடியவில்லை. அவன் சாதாரணமாகவே எண்ணி,

'இது எல்லாருக்குமான விதிதானே? இதுக்கு ஏன் நீங்கள் கவலப்படுகிறியள்? கவலைப்பட்டு இப்ப என்ன செய்கிறது? அதெல்லாம் நடந்து முடிஞ்ச கதைதானே?' என்றான்.

'விடுங்க. நாங்கள் நாளைக்குக் கதைப்பம். இப்ப வேண்டாம். ரைமும் ஆச்சுது. சரியா?'

'ஒரு பிரச்சனையும் இல்லை. நாளைக்குக் கதைப்பம்.'

அவள் மிகவும் கவலையாக எழுந்து சென்றாள். அதைப் பார்த்த சந்திரனுக்கும் கவலையாக இருந்தது. நாட்டுப் பிரச்சனைக்கு ஏன் இவள் இவ்வளவு கவலைப்படுகிறாள் என்பது அவனுக்கு அப்போது விளங்கவில்லை. நாட்டுப் பிரச்சனையை ஒவ்வொரு மனிதரும் ஒவ்வொரு மாதிரிப் பார்ப்பார்கள். அதற்கு ஏற்ப அவர்கள் உணர்வுகள் இருக்கும். அவளது உணர்வு இப்படி இருக்கிறது. பருவாய் இல்லைப் பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்துக் கொண்டு சந்திரன் தனது வேலையை மீண்டும் தொடங்கச் சென்றான்.

## 8 மீண்டும்

அடுத்த நாள் அந்தப் பெரிய உணவகத்திலிருந்து சாப்பிடாது அதற்கு முன்பாக இருக்கும் சாப்பாட்டு அறைக்கு வருமாறு சுகந்தி சந்திரனுக்குச் செய்தி அனுப்பி இருந்தாள். அது ஒரு சிறிய சாப்பாட்டறை. அதற்குள் குடிவகைகள், உணவுப் பொருட்கள் என்பன குளிரூட்டப்பட்ட இயந்திரத்தில் உண்டு. பணம் போட்டு அவற்றை எடுத்துக் கொள்ள முடியும். அங்கிருந்து சாப்பிடுவதற்குப் பல மேசைகளும், கதிரைகளும் உண்டு. அதிகமான ஆட்கள் அங்கு வருவது இல்லை. அதனால் எப்போதும் அங்கு பொதுவாக அமைதியாகவே இருக்கும். ஏன் அதைத் தான் முதலில் யோசிக்கவில்லை என்பதில் சந்திரனுக்குச் சிறிது வெட்கமாக இருந்தது. அடுத்த நாள் அவள் சாப்பாடு கட்டிக் கொண்டு வருவதாய் செய்தி அனுப்பியதால் சந்திரனும் சாப்பாடு கட்டிக் கொண்டே வந்தான். அவள் நேற்றுக் கதைத்ததிலிருந்து அவனுக்கு மனது அமைதி இல்லாமல் அலைபாய்ந்தது. எங்கள் சமுதாயம் பெரிதாக மாறவில்லை என்பது அவன் எண்ணம். அதற்குச் சந்திரனின் அம்மாவே சாட்சி என்பது அவனுக்கு நன்கு தெரியும். அம்மா தான் நாட்டை விட்டுப் புறப்படும் போது எப்படி இருந்தாரோ இன்றும் அப்படியே இருக்கிறார் என்பது அவன் எண்ணம். அம்மா மாத்திரம் இல்லை அவனது அனேக உறவினர்களும் அப்படியே இருக்கிறார்கள் என்பதை அவன் நாட்டிற்குப் போய் அவர்களோடு கதைத்த பொழுது, தொலைப்பேசியில் அவர்களோடு கதைக்கும் பொழுது நன்கு அறிந்து கொண்டான். மதியச் சாப்பாட்டிற்கான நேரம் வந்ததால் எதிர்பார்ப்போடு சந்திரன் சாப்பாட்டு அறையை நோக்கிச் சென்றான். சுகந்தியும் அதை நோக்கி வந்தாள். இருந்தாலும் அவளுக்கு இது வேண்டுமா என்கின்ற தயக்கமாக இருந்தது. மீண்டும் ஒருமுறை,

வேண்டாம் என்று கடந்த அனைத்தையும், வாழ்வதான வேதனைதரும் அனுபவம். எதையும் மறைக்கக் கூடாது. நட்பென்றாலே மறைக்க முடியாது. நட்பிற்கு மேல் செல்வது என்றால் எப்போதும் ஒரே மனதாகக் கொட்டித் தீர்த்து உறவைச் சீர்படுத்துவது உத்தமம் என்பது அவள் கருத்து. அதில் அவளுக்கு எந்தத் தடுமாற்றமும் கிடையாது. ஆனால் அதை எப்பிடிச் சொல்லி முடிப்பது என்பதே அவள் வேதனையாகவும், சோதனையாகவும், சவாலாகவும் இருந்தது. கேட்ட பின்பு சந்திரன் என்ன சொல்வான் என்பது சுகந்திக்குத் தெரியாது. எதுவாக இருந்தாலும், என்ன வேதனை என்றாலும், நான் அதைச் சொல்லி அவன் சொல்வதையும் கேட்க வேண்டும் என்று முடிவு செய்தவளாய் அவள் அங்கே சென்றாள். உள்ளே சென்ற போது சந்திரன் அவளுக்காகக் காத்துக் கொண்டு இருந்தது அவளுக்கு ஒருவிதமான நம்பிக்கையைத் தந்தது. அவளும் சிரித்த வண்ணம் சென்று அவன் அருகே இருந்தாள்.

'இது நல்ல அமைதியான இடமா இருக்குது. அங்க இருக்கிறதிலும் இது நல்ல இடமா இருக்கும் எண்டு நான் பிறகுதான் யோசிச்சன்.' என்றாள் சுகந்தி.

'உண்மைதான். நான் இதை முதல்ல யோசிக்கவே இல்லை. நீங்கள் சொன்ன பிறகுதான் எனக்கும் இந்த உண்மை உறைச்சுது.'

'சரி... நீங்கள் எப்ப நோர்வேக்கு வந்தீங்கள்?'

'நான் எண்பத்தி எழு பெப்ரவரியில இங்க வந்திட்டன்.'

'ஓ நிறையக் காலம்... அப்ப ஏன் உங்கடை வாழ்க்கையை வீணடிச்சிட்டியள்?'

'அதுதான் நான் ஏற்கனவே சொல்லி இருந்தனே? ஊரில சனம் முட்டையில மயிர் பிடுங்கிற மாதிரிப் பாப்பினம். அப்ப எப்பிடி ஒரு வாழ்க்கை அமையும் சொல்லுங்க பார்ப்பம்? அதோடை எனக்குப் பொறுப்புகளும் இருந்திச்சுது. அதைவிட அம்மாவுக்கும் கொஞ்சம் எதிர்பார்ப்புக்கூட...'

'உங்கடை அம்மா நிறையச் சீதனம் எதிர்பார்ப்பாங்களோ?'

'சீதனத்தைவிட மற்றைய நொட்டையள் அதிகமாகப் பார்ப்பா. இப்ப அவவும் அலுத்துப் போயிட்டா எண்டு நினைக்கிறன். இனிப் பெரிசா அவ அப்பிடி இருக்கமாட்டா எண்டு நினைக்கிறன். ஆனா எதுவும் திடமாச் சொல்ல முடியாது.'

'அப்ப ஐம்பது ஐம்பதுதான் எண்டுறியள்?'

'சீ அப்பிடி எல்லாம் இல்லை. நீங்கள் பயப்பிடாதையுங்க. சரி நீங்கள் உங்கடை கதையை விருப்பம் எண்டாத் தொடருங்க.'

'எனக்கு உண்மையில அந்தக் கதையைத் தொடர விருப்பம் இல்லை. அது திரும்பவும் என்னைத் துடிக்க வைக்கிறதா இருக்கும்.'

'சரி... அப்பிடி எண்டா வேண்டாம். இறந்த காலத்தைக் கேட்டு அதை நாங்கள் இனி என்ன திருத்தியா எழுத முடியும்?'

'நீங்கள் சொல்கிறது உண்மை. ஆனால் உறவு எண்டு வந்தால் அதையும் அறிஞ்சிருக்கிறது முக்கியம். அப்பிடி எண்டால்த்தான் தேவையில்லாத பிற்கால அதிர்ச்சிகள் வராமல் தடுக்கலாம்.'

'இப்ப என்ன சொல்ல வாறீங்கள்?'

'அதைச் சொல்லத்தான் வேணும் எண்டுகிறன். ஆனா சொல்ல வெளிக்கிட்டா மனசு வலிக்கும் எண்டு நினைக்கப் பயமா இருக்குது. அந்த வேதனையை, அவமானத்தை, வலியை அனுபவிச்சவையத் தவிர மற்றவைக்கு முழுசாத் தெரியாது. அதை அனுபவிக்கிறவைக்கு மட்டுமே அந்த வலியின்ரை கொடுமை நிச்சயமாத் தெரியும்.'

'ம்... உண்மை. எனக்குப் பிரச்சனை இல்லை. நீங்கள் விருப்பம் இல்லாட்டிச் சொல்லாமல் விடலாம்.'

'இல்லை நான் சொல்லுகிறன்... எல்லாத்தையும் அறிஞ்சு, தெரிஞ்சு ஒரு உறவு உருவாக வேணும். அப்பதான் அது

நிலைக்கும். பிறகு வாழ்க்கையில மிஸ் அண்டர்ஸ்ராண்டிங் வராமல் இருக்கும். நான் எந்த மிஸ் அண்டர்ஸ்ராண்டிங்கிற்கும் இடம் கொடுக்க விரும்ப இல்லை.’

‘விளங்குது. நீங்கள் உங்கடை விருப்பப்படி உங்களுக்கு எது வசதியா இருக்குதோ அதைச் செய்யுங்க.’

‘நாங்களும் எல்லாரையும் போல பெருமையோடதான் வன்னிக்குப் போனம். பயிற்சி செய்தம். போராடினம். அது எல்லாருக்கும் தெரிஞ்ச விசயம். அதைப்பற்றி நான் உங்களுக்குச் சொல்லிக் கொண்டு இருக்கத் தேவையில்லை.’

‘ம்... அது உண்மை. அது எல்லாருக்கும் தெரிஞ்ச விசயம். நீங்க சொல்லுங்க.’

‘போராடினவரைக்கும் எங்களுக்கு உள்ள ஒரு வெறி, ஒரு ஓர்மம் இருந்தது. நாங்கள் நாட்டிற்கு ஏதோ பிரயோசனமாய்ச் செய்கிறம் எண்டுகிற மனத்திருப்தியோடை, முழு மனதோடை, ஓர்மமாப் போரடினம். ஆனாப் போராட்டம் நாங்கள் எல்லாரும் நினைச்ச மாதிரி நடக்கேல்லை. அது இப்படி முடியும் எண்டு யாரும் எதிர்பார்க்கேல்லை. திடீரென கையைத் தூக்க வேண்டி வரும் எண்டு நாங்கள் கனவும்காண இல்லை. அப்பிடி வந்தால் சயனெட் குப்பியத் தவிர வேற என்ன செய்யலாம் எண்டும் தெரியாது. எங்களுக்குச் சாக விருப்பம் இல்லை. சாகாமல் பிடிபட்டாலும் என்ன நடக்கும் எண்டும் தெரியும். அப்படி என்ன நடக்கும் எண்டு ஒரு ஊகம் இருந்தாலும் எங்களால சாக முடிய இல்லை. எல்லாத்தையும் எறிஞ்சுபோட்டு நாங்களும் அப்பாவியள் போல சரணடைஞ்சம். யேசுவை யூதாஸ் காட்டிக் குடுத்த மாதிரி எங்களைக் காட்டிக்குடுக்கத் தலையாட்டிகள் இருந்தாங்கள். அவங்கள் தலையாட்டின பிறகு எங்களுக்கு இனி விடிவு இல்லை எண்டது தெரிஞ்சு போச்சுது.’

அதற்குமேல் சொல்ல முடியாது சுகந்தி நிறுத்தினாள். அவள் கண்கள் சிவந்து, மனது வெடித்துக் குமுறினாள். அதைப் பார்த்துக் கொண்டு இருந்த சந்திரனுக்குச் சங்கடமாய் இருந்தது. அத்தோடு மனதுள் கவலையாகவும் இருந்தது.

‘நீங்கள் இவ்வளவு கஸ்ரப்பட்டு இதைச் சொல்ல வேணும் எண்டு இல்லை. ஏன் உங்களைத் தேவையில்லாமல் கஸ்ரப்படுத்துகிறியள்? விடுங்க… ஆறுதலா உதைப் பற்றிக் கதைக்கலாம்.’

‘சீ… பருவாய் இல்லை. தொடங்கினாக் கவலைதான் வரும். அதுக்காக இதைப் பற்றிச் சொல்லாமல் விட இயலாது.’

‘அதைச் சொல்லுங்க…’ என்று அவளை ஊக்குவிக்கும் துணிவு சந்திரனிடம் இருக்கவில்லை. அதற்காக மௌனம் சாதிக்கவும் முடியாது என்பதும் அவனுக்கு விளங்கியது. அதனால் அவன்,

‘ம்…’ என்றான்.

‘இப்பிடி எல்லாம் கொடுமை நடக்கும் எண்டு எனக்கு நிச்சயமாகத் தெரிஞ்சு இருந்தா சயனைட் குப்பியைக் கடிச்சு இருக்கலாம். இல்லாட்டிக் கிறனைட்டை வெடிக்க வைச்சிருக்கலாம். அப்படி நிறையப்பேர் தற்கொலை செய்தவை. ஏதாவது மன்னிப்புக் கிடைக்கலாம் எண்டு நாங்கள் முட்டாள்தனமாக நினைச்சம். ஆசையில அற்பமா உயிர் வாழ வேணும் எண்டு நினைச்சம். இப்படி உயிர் வாழத் தப்பி ஓடினதிற்காய் புலியள் கட்டிவைச்சு அடிச்சதும் தெரியும். தெரிஞ்சும் உயிர் வாழ வேணும் எண்டு ஆசையாக இருந்திச்சுது. சரணடைஞ்ச பிறகு சித்திரவதை செய்யலாம் எண்ட பயம் எப்பவும் இருந்திச்சுது. ஆனா இப்பிடி எங்களை ஒரு இடத்தில அடைச்சு வைச்சு கொடிய மிருகங்கள்கூட கனவிலும் நினைக்காததை வக்கிரம் பிடிச்ச சிங்கள இராணுவ மிருகங்கள் நித்தமும் தாங்கள் நினைச்ச நேரம் எல்லாம் வந்து… தணியாத வெறியோடை…’

அவள் மேற்கொண்டு சொல்ல முடியாது விம்மி விம்மி அழுதாள். சந்திரனுக்கு அவளைக் கட்டி அணைத்துக் கொள்ள வேண்டும் போல் இருந்தது. அப்படிச் செய்வதை யாராவது தமிழ் ஆட்கள் பார்த்துக் கொண்டு சென்றால் அது தப்பான செய்தியாகப் பரவி விடும் என்பதை அறிந்து அந்த எண்ணத்தைக் கைவிட்டான். சிலவேளை அது சுகந்திக்குக்கூடப் பிடிக்காமல் இருக்கும் என்கின்ற எண்ணமும் அவனிடம் இருந்தது.

‘நீங்கள் முழுவதையும் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. நான் உதைப் பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறன். நான் உதை எல்லாம் பெரிய விசயமா நினைக்க இல்லை. ஆனா எங்கடை சமுதாயம் அப்பிடி இல்லை. என்ன நிலமையில நடந்தது எண்டதைப் பற்றி நினைக்காமல் வாய்க்கு வந்த மாதிரிக் கதைக்குங்கள்.’

‘அதுதான்... எதையும் தொடங்க முதல் நான் இதில கிளியரா இருக்கோணும் எண்டு நினைச்சன்.’

‘ம்... அது சரி. உங்களுக்குப் பிரச்சனை இல்லை எண்டா ஊரில கதைச்சுப் பார்க்கிறன். குறிப்பு கிறிப்பு எண்டு திரும்பவும் குழப்பாமல் இருந்திச்சினம் எண்டா அதுவே பெரிய விசயமா இருக்கும்.’

‘நானும் அப்பிடித்தான் நினைக்கிறன். அதுக்கெல்லாம் நேரம் செலவு செய்யத் தேவையில்லை. நீங்க எதுக்கும் ஊரில கதைச்சுப் பாருங்க. அனேகமா இந்த விசயம் பலருக்கும் தெரியும். இது ஒண்டும் மூடிமறைக்கிற விசயம் இல்லை. அதால நீங்களும் மறைக்காமல் சொல்லுங்க. அப்பதான் பின்னுக்கு யாரும் எதுவும் சொல்ல மாட்டினம். பிறகு இதில சிக்கல் வராமல் இருக்கும்.’

‘எனக்கும் அது விளங்குது. எதுக்கும் முதல்ல நாங்கள் முயற்சிப்பம்.’

‘சரி ரைமாகுது. நான் போக வேணும்.’

‘நானும்தான்.’

‘ஊருக்குக் கதைச்ச பிறகு மசேச் பண்ணுங்க... சந்திப்பம்.’

‘ம்... அதுவும் சரிதான். நான் கதைச்சுப் போட்டு மசேச் பண்ணுகிறன்.’

## 9 மாறாத மனிதர்கள்

'கலோ. அம்மா...'

'சந்திரனே? நீ போன் பண்ணுவாய் எண்டு நினைச்சு இருந்தன். எப்பிடி இருக்கிறாய்? சுகமா இருக்கிறாய் தானே? ஒழுங்காச் சாப்பிடுகிறாய் எல்லே? ஒழுங்காச் சாப்பிட வேணும்... சரியே?'

'அதெல்லாம் நான் ஒழுங்காச் சாப்பிடுகிறன். நான் என்ன சின்னப் பிள்ளையே நீங்கள் புத்திமதி சொல்ல. காடு வாவா எண்டுகிற வயது வரப்போகுது. நீங்கள் உங்கடை புதினத்தைச் சொல்லுங்க.'

'முதல்ல உன்ரை வாயக் கழுவடா. என்ன கதை கதைக்கிறா? சரி அதை விடு... இனிமேலைக்கு இப்படிக் கதைக்காதை. இஞ்சை என்னடா புதினம் இப்ப? நான் நல்லா இருக்கிறன். ஊர்தான் கேட்டுப் போய் கிடக்குது. கள்ளர் காடர், வாள் வெட்டு, கத்திக் குத்து, தூள் அடிச்சுப்போட்டுத் தூங்கிறதுகள் எண்டு எல்லாம் அலங்கோலமாய் அழியுதுகள். யுத்தத்தால ஒருவித அழிவு எண்டா இது இன்னொருவிதமான அழிவு. வெளியால போகவும் பயமா இருக்குது. எங்க எவன் மோட்டச்சைக்கிளில வந்து உருவிக் கொண்டு ஓடுவாங்கள் எண்டும் தெரியாது.'

'அதுக்கு நாங்கள் என்ன செய்கிறது. நீங்கள்தான் கவனமாய் இருக்க வேணும். தேவையில்லாமல் தனிய வெளிக்கிடாதேங்க. வயது போனவை எண்டா அவங்களுக்கு இன்னும் வசதியா இருக்கும்தானே?'

'அது உண்மை. நான் சிலவேளை கமலத்தின்ரை பெடி குமரனைத் துணைக்குக் கூட்டிக் கொண்டு போகிறனான். இல்லாட்டித் தேவியின்ரை பெடி சிலவேளை வரும். அதால கொஞ்சம் நிம்மதி. மற்றும்படி உன்ரை அக்காள் இல்லாட்டித் தங்கச்சி வருவினம். அதைப் பற்றி நீ யோசிக்காத. அதெல்லாம் இங்க ஒரு பிரச்சனை இல்லை. எல்லாம் பழகிப் போச்சுது.'

'அப்பிடி எண்டாச் சரி. அக்கா என்னவாம்?'

'அவளுக்கு என்ன. காசுதான் இன்னும் நிறையத் தேவையாம்.'

‘அதை விடுங்க... அது ஒரு நாளும் தீராத பிரச்சனை.’

‘நீ சொல்லுகிறதும் சரி. அப்பப்ப கொஞ்சம் கொஞ்சம் உதவி செய். மற்றும்படி இனி நீ உன்ரை வாழ்க்கையைப் பார். அப்படிக் கட்டாயம் நீ உதவி செய்ய வேணும் எண்டா நான் சொல்லுகிறன்.’

‘சரி அம்மா. உனக்குப் பிறசர் எப்பிடி இருக்குது?’

‘பருவாய் இல்லை. மருந்து ஒழுங்காப் பாவிக்கிறன். இப்ப நான் சும்மாவும் இருக்கிறதில்லை. இயலுமானவரை எதையாவது செய்வன். அதோடை சாப்பாட்டிலும் கவனம். அதிலும் உப்பில இன்னும் வலுகவனம்.’

‘உங்களுக்கு நல்ல உப்பு இல்லாமல் இறங்காதே?’

‘என்ன செய்கிறது?’

‘நான் ஒரு விசயம் சொல்ல வேணும் எண்டு போன் எடுத்தன்.’

‘சொல்லு என்ன விசயம்?’

‘தேவராசா மாஸ்ரரைத் தெரியும் இல்லையா?’

‘ஓ தெரியும். அவருக்கு என்னடா?’

‘அவருக்கு ஒரு மகள் இருக்கிறாள்... தெரியுமா?’

‘ஒரு பெட்டை படிப்பை விட்டிட்டு இயக்கத்துக்கு ஓடினது... அதைச் சொல்லுறியே?’

‘இப்பவும் இதை எல்லாம் கதைச்சுக் கொண்டு இருக்கிறதே? இப்பிடி நொட்டை பிடிக்காமல் இனிக் கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போக வேணும் அம்மா.’

‘சும்மா இருடா. எனக்குப் புத்திமதி சொல்லுறாய்... உனக்கு முதல்ல ஒழுங்கா விசயம் தெரியாது. வெளியால சனம் கதைக்கிறது குறைவே தவிர எல்லாம் அப்பிடித்தான்

இருக்குது. எதுவும் இங்க மாற இல்லை. என்னைப் பொறுத்தவரை மாற வேண்டிய அவசியமும் இல்லை.'

'என்னம்மா இப்படிச் சொல்லுகிறியள்?'

'இதுதான் இஞ்சத்தை நடைமுறை. நீ சொல்ல வந்த விசயத்தைச் சொல்லு. நாங்கள் நினைச்சு ஊர் ஒரு நாளும் மாறப்போகிறது இல்லை.'

'ஊர்... ஊர்... எண்டுகிறதை விட்டிட்டு. நாங்கள் எங்கடை அலுவலைப் பார்ப்பம்.'

'ம்... நீ சொல்லு?'

'தேவராச மாஸ்ரற்றை மகள் இங்கதான் இருக்கிறாள்.'

'அதுக்கு என்ன?'

'அவள் நான் வேலை செய்கிற இடத்தில டொக்ரரா வேலை செய்கிறாள். நானும் அவளும் கதைச்சம். கதைக்க நல்ல மாதிரி இருக்கிறாள். அதோடை அவள் இங்க ஆராய்ச்சி வேலையும் செய்கிறாள்.'

'அவள் என்ன வேலை செய்தா என்ன? அவள் எல்லாம் எங்களுக்கு வேண்டாம். அது சரி வராது. அந்த நினைப்பை மறந்திடு.'

'என்னம்மா இப்படிச் சொல்லுகிறா?'

'நான் திரும்பவும் சொல்லுகிறன்... அது எங்களுக்கு ஒரு நாளும் சரிவராது.'

'ஏன் அம்மா?'

'அவள் முதல்ல வீட்டை விட்டு ஓடினாள். வன்னிக்க அங்க இங்க எண்டு எல்லாரும் ஒண்டுமண்டா அலைஞ்சு திரிஞ்சுதுகள். கடைசியா அவங்களை விட்டிட்டு ஆமியிட்டைச் சரணடைஞ்சாள். அவங்கள் கொண்டே வன்னிக்க அடைச்சு

வைச்சுச் சீரளி சீரளி எண்டு சீரளிச்சுப் போட்டு காசைக் குடுத்ததால உயிரோடை விட்டிட்டாங்கள். அதுக்குப் பிறகு இங்கை யார் அவளை ஊரில பாப்பாங்கள்? அதோடை இங்க நிம்மதியா இருக்கவும் முடியாதுதானே? அதால வெளிக்கிட்டு உங்கால வந்திட்டாள். அதுக்காக நீ அவளைக் கலியாணம் செய்ய வேண்டிய எந்த அவசியமும் இல்லை. அப்படிச் செஞ்சா இங்க நாங்கள் ஊருக்க தலையைக் காட்டேலாது. நாலுசனம் நாலு மாதிரிக் கதைக்குங்கள். எவ்வளவோ ஒழுங்கான பொம்பிளையள் இருக்க நீ ஏன் அதுக்குள்ள போய் விளவேணும்? அது எங்களுக்கு வேண்டாம். சும்மா விசயம் விளங்காமல் தலையைக் கொண்டே நீட்டிப்போட்டுப் பின்னால வருத்தப்படுகிறது இல்லை. அதுக்கு நான் இடம்தரமாட்டன்.'

'ஒழுங்கான பொம்பிளையை நீங்களும் இவ்வளவு காலமாய் தேடினியள் தானே? கிடைச்சுதே? பிறகும் அதையே சொல்லிக் கொண்டு இருந்தா என்ன நடக்கும்? அதால வாறதைப் பார்த்துச் செய்கிறது புத்தி அம்மா.'

'ஆராவது வாறதைப் பார்த்துச் செய்யலாம். உதுக்கு அவசரப்படாதை... எங்களுக்கு உவள் வேண்டாம். என்னத்துக்குப் போனாலும் ஓடினதுகள் எல்லாம் என்ரை குடும்பத்திற்கு வேண்டாம். அதில எந்த மாற்றமும் இல்லை.'

'என்னம்மா நீ இப்படிக் கதைக்கிறா? நான் அவளைக் கட்டலாம் எண்டு பிளான் பண்ணினன்.'

'சும்மா விளையாடாத. பிறகு நாங்கள் ஊருக்க நாலு மனிசற்றை முகத்தில முழிக்க இயலாது. ஏற்கனவே அதைப் பற்றி உனக்கு விபரமாய் நான் சொல்லிப்போட்டன். ஓம் இதில எல்லாம் விளையாடக் கூடாது.'

'இதுதான் எல்லாரும் சொல்லுகிற சப்பைக் காரணம். இதையே நீங்களும் சொல்லுகிறியள்?'

'அது நாங்கள் எப்பிடி இருக்கோணும் எண்டு எங்களுக்கு ஒரு வரைமுறை இருக்குது. என்ரை முடிவு இதுதான். அதில எந்த மாற்றத்தையும் நீ எதிர்பார்க்காதை.'

‘நான் இங்கை பார்த்துக் கலியாணத்தை முடிக்கிறன்.’

‘அது நல்லா இருக்காது. பிறகு நீ எங்கடை முகத்தில முழிக்க முடியாது.’

‘என்னம்மா சொல்லுகிறியள்?’

‘உனக்கு நாங்கள் வேணும் எண்டா... அம்மாவுக்கு வந்து கொள்ளி போடுகிற நினைப்பு இருந்தா, உந்த எண்ணத்தைக் கைவிடு. இனி உதைப்பற்றி என்னோடை கதைக்காத.’

‘என்னம்மா? இப்பிடிச் சொல்லுகிறியள்?’

‘இதுதான் இங்கத்தே நிலைமை. இங்கை ஒண்டும் எந்த விசயத்திலும் மாற்றம் இல்லை. அதால இதுதான் என்ரை முடிவும்.’

‘எனக்கு இனிக் கலியாணமே வேண்டாம். என்னை இனி அதைப் பற்றிக் கேட்டுத் தொல்லைப்படுத்தக் கூடாது.’

‘எதுக்குக் கோவப் படுகிறது... எதுக்குக் கோவப்படக்கூடாது எண்டு ஒரு தெளிவு இருக்க வேணும். எடுத்ததுக்கு எல்லாம் கோவப்படக்கூடாது.’

‘உங்கடை தெளிவும் நீங்களும்... என்னை விடுங்க... எனக்கு இனிக் கலியாணம் கிலியாணம் எண்டு எதையும் தொடங்காதையுங்க.’

‘சும்மா இருடா... நான் பார்க்கிறன். உனக்கு ஒரு நல்ல பொம்பிளையைப் பார்த்துக் கலியாணம் செய்து வைக்கிறன். இவ்வளவு காலம் இருந்துபோட்டு சும்மா இப்ப அவதிப்படாத. ஏன் இப்ப போய் பாதாளத்தில விழுவான்?’

‘சரி ஏதோ செய்யுங்க.’

‘கோவிக்காத... நான் பேசிச் செய்கிறன்.’

‘சரி... நான் வைக்கிறன்...’

‘அவசரப்படாதை. இரண்டு கிழமை கழிச்சுப் போன் பண்ணு.’

‘சரி.’

சந்திரன் அலைபேசியைத் துண்டித்தான். மனதும் இரண்டாகத் துண்டாடப்பட்டது போல வேதனையாக இருந்தது. எதிர்க்கவும் முடியாது. விடவும் முடியாது. என்ன செய்வது என்று சந்திரனுக்குக் குழப்பமாக இருந்தது. அவன் சோபாவில் அமர்ந்தான். சுகந்தி எவ்வளவு நல்ல பெண் என்கின்ற எண்ணமும், அவளின் படிப்பு, வேலை, தோற்றம், ஆகிய அனைத்தும் அவனைப் புயலாகக் குழப்பியது. சுகந்தியோடு உறவு தொடர்ந்தால் தொப்புள்கொடி உறவு இல்லை என்றாகும். அப்படி ஒரு நிலை வருவதை அவனால் நினைத்துப் பார்க்க முடியவில்லை.

அவனுக்குச் சோபாவில் இருக்கவே பிடிக்கவில்லை. நெஞ்சு வலிப்பது போல இருந்தது. தனிமனித சுதந்திரத்தைப் பிணைக்கும் உறவுகள். அதை எண்ண அவனுக்கு வெறுப்பாக இருந்தது. அவன் எழுந்து சென்று படுக்கையில் விழுந்தான். அவன் கடைக்கண்கள் வற்றாத ஆறாக, மனம் இரணத்தோடு கரைந்தது.

*

அடுத்த நாள் எழுந்த போது அவனுக்கு வேலைக்குப் போகவே பிடிக்கவில்லை. பிடிப்பது பிடிக்காதது வேறு, பொருளாதாரப் பிடி வேறு. அதற்கு எந்தச் சாட்டும் சொல்லித் தப்பிக்க முடியாது. என்னவாக இருந்தாலும் தான் வேலைக்குச் செல்ல வேண்டும் என்பதால் வேறு வழி இன்றி எழுந்து வேலைக்குப் புறப்பட்டான். அப்படிப் புறப்பட்டாலும் மனதிற்குள் வேதனையாக இருந்தது. சுகந்திக்கு என்ன பதில் சொல்வது? இன்று அவளைச் சந்திப்பதா அல்லது சந்திக்காது விடுவதா? சந்தித்தால் என்ன சொல்வது? சந்திக்காது விட்டால் அவள் என்ன நினைப்பாள்? என்ன முடிவு செய்வாள்? எது செய்தாலும் பாதிப்பு வரப்போகிறது. ஆனால் அதில் எது நியாயமான... துணிவான முடிவு? அதையே நான் செய்ய வேண்டும். அப்படி என்றால் இன்று சந்திக்க முடியுமா என்று செய்தி அனுப்ப

வேண்டும். அப்படி அனுப்பினாலே அவள் வருவாள். அப்படிச் செய்தி அனுப்ப அவனுக்கு மனதில் தயக்கமாக இருந்தது. இருந்தாலும் அதைச் செய்ய வேண்டும் என்பது அவனுக்கு விளங்கியது. அவன் அலை பேசியை எடுத்து இன்று மதியச் சாப்பாட்டின் போது சந்திக்கலாமா என்று கேட்டுத் தகவல் அனுப்பினான். அதற்கு அவள் தன்னால் பன்னிரண்டு மணிக்கே வரமுடியும் என்று தகவல் அனுப்பி இருந்தாள். அதற்கு மறுமொழி அனுப்பி விட்டுத் தனது வேலைத்தளத்தை நோக்கி அவன் சென்றான்.

அன்று அவன் மனது அமைதி இன்றித் துடித்தது. சொல்லாமல் விட்டுவிடலாம். ஆனால் அது பண்பல்ல. அது ஒருவகையான ஏமாற்று வேலை. தன்னால் அப்படியான ஏமாற்று வேலை செய்ய முடியாது என்று அவனுக்கு நன்கு தெரியும். அதனால் என்ன வந்தாலும் இன்று அவளைச் சந்திக்க வேண்டும் என்பதற்கு மனது பின் இழுத்தாலும் அதையும் மீறிச் சந்திப்பதாய் முடிவு செய்து கொண்டான்.

*

நேரம் நெருங்கியது. மனதில் அவளைச் சந்திக்கும் துணிவு இல்லாது போய் இருந்தது. தயக்கம் தலைமேல் குந்தியது போல உடல் அசைய மனம் மறுத்தது. ஆனால் இதிலிருந்து தப்பிப்பது தப்பு என்பதும் விளங்கியது. அவன் தயக்கத்தோடு சென்றான். அவன் சென்ற போது அவள் ஏற்கனவே அங்கு வந்துவிட்டாள். அவளைப் பார்க்கவே அவனுக்குத் தயக்கமாக இருந்தது. இருந்தும் எதுவும் செய்ய முடியாதவனாய் சென்று அவள் இருந்த நாற்காலிக்கு முன்பு இருந்த நாற்காலியில் அமர்ந்தான். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பார்கள். அது யாருக்குப் பொருந்துகிறதோ இல்லையோ சந்திரனுக்கு நன்கு பொருந்தி இருந்தது. அதை அவள் அவனைப் பார்த்து அப்படிக் கேட்டபோது மேலும் நன்கு உணர்ந்து கொண்டான். சந்திரன் மேசையில் அமர்ந்த உடனேயே அவனைப் பார்த்து அவள்,

‘என்ன முகம் பேயறைஞ்ச மாதிரி இருக்குது?’ என்று கேட்டாள். சந்திரனால் அதற்கு எப்படிப் பதில் சொல்வது என்று விளங்கவில்லை. அவன் ஏற்கனவே குழம்பிப் போய் இருந்தான்.

அதை மேலும் குழப்புவது போல இருந்தது அவள் கேள்வி. சந்திரன் தன்னைச் சமாளித்துக் கொண்டு,

'அப்பிடியா இருக்குது?' என்று வழிந்தான்.

'வழியாதையுங்க... உண்மையான பதிலைச் சொல்லுங்க.'

'நான் வழிய இல்லை. ஆனால் மனவருத்தத்தில இருக்கிறன்.'

'மனவருத்தமா? என்ன மனவருத்தம்?'

'அதை எப்பிடி நான் சொல்லுகிறது எண்டுதான் தவிக்கிறன்.'

'ம்... ஏலும் எண்டா... விருப்பம் எண்டாச் சொல்லுங்க. இல்லாட்டி விடுங்க.'

'அதைச் சொல்லியே ஆகவேணும்.'

'அப்ப சொல்லுங்க...'

'ம்....'

'என்ன இவ்வளவு தயக்கமான விசயம்?'

'அது வந்து... நான் ஊருக்கு அம்மாவோடை கதைச்சன்.' என்ற உடனேயே சுகந்தியின் முகம் வாடிவிட்டது. தான் ஏன் இவ்வளவு யோசிக்கிறேன் என்பதைக் கண்டுபிடித்துவிட்டாள் என்பது சந்திரனுக்கு விளங்கியது. அடுக்களைக்குள் அடைந்து கிடக்கப் பிறந்தவள் இல்லை அவள். நாட்டுக்காகப் போராடி இப்போது அறிவுஜீவிகளோடு மனிதத்திற்காய் போராடுபவள். அவளுக்கா விளங்காது எனது மனவோட்டம் என்பது அவனுக்கு விளங்கியது. தன்னை எண்ண அவனுக்கு வருத்தமாகவும், வெட்கமாகவும், கவலையாகவும் இருந்தது. இருந்தும் பெற்ற தாயை எப்படி எதிர்ப்பது? அத்தோடு ஊர், சுற்றம் அதனால் வரும் வருங்காலம் என்று எல்லாம் பாதிக்கப்படுவதை அவனால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அதே நேரம் இன்று வரைக்கும் அவனால் சுகந்தியை வேண்டாம் என்று மனதளவில் ஒப்புக் கொள்ளவே முடியவில்லை.

‘நீங்கள் சொல்ல வந்ததை என்னவாக இருந்தாலும் பருவாய் இல்லைச் சொல்லுங்க.’

‘ஊர்ச்சனங்கள் நாங்கள் நினைக்கிற மாதிரி இல்லை. என்னுடைய அம்மாவும்தான். என்ன செய்கிறது? பெத்த தாயை என்னால எதிர்க்க முடியாமல் இருக்குது. உயிரைக் குடுத்து வளர்த்தா. இப்ப நீ வேண்டாம் எண்டால்? ஆனால் உங்களையும்... நான் என்ன செய்ய முடியும்?’ அவன் கண்கள் கலங்கத் துளிகள் கண்களிலிருந்து அவனையும் மீறி உருண்டன. சுகந்தியின் கண்களின் கடையிலும் ததும்பும் கண்ணீர்த் துளிகள். அவள் அவனைக் கோபத்தோடு பார்க்க வில்லை. அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

‘சமுதாயத்தின் மேல குற்றம் சொல்லாதேங்க. எங்கடை உரிமைக்கு நாங்கள்தான் போராடவேணும்.’

‘உண்மைதான். நான் கோளை. அப்பவும் போராடப் போக இல்லை. இப்பவும் என்னால போராட முடிய இல்லை.’

அதற்குமேல் அவள் அங்கே நிற்கவில்லை. அவள் கண்களைக் கண்ணீர் மீண்டும் மறைத்தாலும் மனதில் தெளிவு பிறந்து இருந்தது. சிலருக்குப் போராட்டம் வாழ்க்கையில் வந்து போவது உண்டு. தனக்கு வாழ்க்கையே போராட்டமானதை அவள் விளங்கிக் கொண்டாள். அதற்காகப் போராட அவள் தயாரானாள். இருந்தும் சந்திரனை எண்ணும்போது அவளது நெஞ்சு இரணமாக வலித்தது.

-முற்றும்-

## உதயம்

இந்திரன் அந்த விகாரைக்குள் புகுந்தான். புத்தரை அங்கே கண்டு கொள்ளலாம் என்கின்ற திடமான நம்பிக்கை அவனிடம் இருந்தது. இந்திரன் தன்னை ஒரு முறை பார்த்துக் கொண்டான். பௌத்த துறவி போலக் காவி தரிக்காவிட்டாலும் அவனும் காவி தரித்திருந்தான். தலை மொட்டையாக மழிக்கப்பட்டு இருந்தது. முகத்தில் துளியளவு ரோமம்கூட இல்லை. அது பளிங்காக மினுமினுத்தது. அவன் இன்னும் பௌத்த துறவியாக மாறிவிடவில்லை. எதுவாக மாறவேண்டும் என்பதைப் பற்றி அவன் இன்னும் முடிவு எடுக்கவில்லை. அதற்கு முன்பு புத்தரைக் காணவேண்டும் என்பது அவனுடைய அடங்காத அவா. அந்த அவாவோடே அவன் அந்த விகாரைக்குள் புகுந்தான். புத்தர் உயிரோடு இருக்கிறாரா? இன்று அவர் இல்லை என்று இந்த உலகம் நம்பினாலும் அவரைக்காண வேண்டும் என்பது அவனது நம்பிக்கையுடன் கூடிய அவா. அவரைக் கடவுள் ஆக்காது இருக்குமாறு அவர் கேட்டுக் கொண்டார். யாரும் அதைக் கேட்கவில்லை. இது பற்றி இந்திரனுக்குத் தெரியாது. இந்திரனாலும் அதைக் கடைப்பிடிக்க முடியவில்லை. அவனும் கடவுள் என்றால் அர்ச்சுனனின் கண்ணன் போல் நேரே வந்து பிரபஞ்சத்தையே தன்னில் காட்ட வேண்டும் என்கின்ற எதிர்பார்ப்புக் கொண்டவன். அதனால் அவன் எண்ணம் அவரைப் பார்ப்பது மட்டுமாகவே இன்று இருந்தது? கடவுள் கோயிலில் இருப்பார் என்பதை இந்திரன் நம்பினான். அதைப் போல புத்தர் இங்கே இருப்பார் என்பதையும் அவன் முழுமையாக நம்பினான். அவன் நம்பிக்கையோடு விகாரைக்குள் காலடி எடுத்து வைத்தான். கால் குளிர்ந்தது. உடல் சிலிர்த்தது. உள்ளம் குளிர்ந்தது. மிகுதி ரோமங்கள் குத்திட்டு நின்றன. அவன் கண்கள் ததும்பின. உள்ளம் கோடைக் காலத்துப் பனியாக உருகிக் கண்களால் அது அருவியாகப் பெருகிக் கொட்டியது. புத்தர் எப்போதும் அமைதியை விரும்பியவர். என்றும் கோபத்தைத் துறந்தவர்.

உள்ளே புத்தரின் காலடியில் அன்று மலர்ந்த வெண்தாமரை மலர்கள். இந்திரன் தனது மனதும் அப்படி இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்தான். புத்தரின் அந்த உருவம் எதை அவர்

வெறுத்தாரோ அதனாலேயே செய்யப்பட்டு இருந்தது. இருந்தாலும் இந்திரனுக்கு அதில் ஒரு சாந்தம் தெரிந்தது. அது அவனை அமைதிக்குள் தள்ளியது. எரியும் தீபங்கள் அவன் மன அழுக்கை எரிப்பதாக இருந்தது. அமைதி, சாந்தம் பரவ அவன் மனது ஒருநிலைப்படத் தொடங்கியது. புத்தர் அதே சாந்தத்தோடு, அதே அமைதியோடு… அவர் இன்று இவனுக்காகப் பேசுவாரா? இந்திரன் புத்தரைப் பார்த்துக் கொண்டு நின்றான். மாறாத அதே சாந்தம். அதே அமைதி. ஆனால் அவர் பேசவே இல்லை. அவர் பேசாது விட்டால்… அவன் கண்கள் கலங்கின. கவலை பெருகியது. மனம் அலைபாயத் தொடங்கியது. பலர் வெண்தாமரை மலர்களைக் கொண்டு வந்து அர்ப்பணித்தனர். சிலர் செந்தாமரை மலர்கள் அர்ப்பணித்தனர். வந்தவர்கள் வழிபாடு முடித்து நகர்ந்தனர். இந்திரனால் முடியவில்லை. இறைவனாகப் புத்தரை இமைக்கும் கணமாவது நிஜமாகப் பார்த்துவிட வேண்டும் என்கின்ற அடங்காத அவன் ஆசை. அதை யாரிடமும் சொல்லிவிட முடியாது. சொன்னால் இவன் பயித்தியக்காரன் என்று நகைப்பார்கள். இந்திரன் அசையாது நின்றான். கண்கள் உருகும் மெழுகாகச் சிந்தின. இந்திரன் நின்றான். ஒரு மணித்தியாலம் நின்றான். பல மணித்தியாலங்கள் நின்றான். ஆலயம் மூடும் வரைக்கும் நின்றான். இறுதியாக அவர்கள் அவனை வெளியேற்றினர். இப்போது புத்தரை எண்ண அவனுக்கு வெறுப்பாக இருந்தது. இனி என்ன செய்வது என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவன் சோகமாக நடந்தான்.

*

இந்திரன் வெள்ளைச் சாறம் கட்டி இருந்தான். வெள்ளை மேற்சட்டை அணிந்திருந்தான். தலையில் வெள்ளைக் குல்லாவும் அணிந்து இருந்தான். சுற்றும் முற்றும் பார்த்தான். அவனை விலத்திக் கொண்டு பலர் உள்ளே சென்றார்கள். அது ஒரு வெள்ளை மசூதி. அரச காலத்தில் வெள்ளை மாபிள் கற்களால் கட்டப்பட்ட அந்த மசூதியின் நிலமும் வெள்ளையாக மினுங்கியது. அவன் இப்படி நிற்பதை சிலர் விசித்திரமாகப் பார்த்துக் கொண்டு உள்ளே சென்றார்கள். இந்திரனுக்கு இங்காவது இறைவனைப் பார்த்துவிட வேண்டும் என்று மனது கிடந்து துடித்தது. இங்கே வந்துவிட்ட அவனுக்கு இப்போது

என்ன செய்வது என்று விளங்கவில்லை. இருந்தாலும் இறைவனை இங்காவது பார்த்துவிட வேண்டும் என்கின்ற ஆசை அவன் நினைவையும் கண்ணையும் மறைத்தன. அவன் மெதுவாக உள்ளே சென்றான். சிலர் அவனைப் பார்த்து நகைத்தனர். எதற்காக நகைக்கிறார்கள் என்பது அவனுக்கு விளங்கவில்லை. அவனும் முகம், கை, கால் அலம்பினான். ஆவலோடு அல்லாவைக்காண அவன் உள்ளே சென்றான். உள்ளே சென்ற அவன் மலைத்தான். திகைத்தான். பிரமிப்பில் உறைந்தான். தங்கம் பதித்த தூண்கள். எங்கும் நிறைந்த சித்திரங்கள். வைரமாய் ஒளிரும் கண்ணாடிச் சுவர்கள். நிலத்தின் செங்கம்பள விரிப்புக்கள். இந்திரனுக்கு ஒருகணம் தன்மீது கோபம் வந்தது. பார்க்க வந்ததை விட்டுவிட்டுப் பராக்குப் பார்ப்பதை எண்ணிக் கவலை வந்தது. அங்கே சிலைகளை வைத்துச் சித்திரவதை செய்யும் முறை இல்லை. அதுவும் அவனுக்கு அன்னியமாக இருந்தது. சிலைகள் இருந்த இடத்திலேயே இறைவனைச் சந்திக்க முடியவில்லை. இங்கு அது முடியுமா? என்கின்ற சந்தேகம் எழுந்தது. இந்திரன் தன்னைக் கடிந்து மனதை ஒருநிலைப்படுத்தினான். முட்டுக்கால் இட்டு மற்றவர்களோடு இருந்தான். கண்கள் மூடிக் கைகள் ஏந்தி அல்லா… அல்லா என்று உள்ளுருகி வேண்டி அந்த அஸ்ரத் தொழுகையைத் தொழுதான். எவ்வளவு நேரம் அவன் அப்படிப் பிரார்த்தித்தான் என்பது விளங்கவில்லை. அல்லா, அல்லா என்று அவன் மனம் உருகியது. இந்திரன் என்று அவர் அழைப்பார் என்று கண்ணை முடிக் காத்திருந்தான். எதுவும் கேட்கவில்லை. எவ்வளவு நேரம் அப்படி இருந்தான் என்பது அவனுக்குத் தெரியவில்லை. யாரோ அவன் தோழில் கைவைத்தார். அவன் கண்களைத் திறந்தான். கிழவர் ஒருவர் அவனைப் பார்த்துப் பரிதாபமாய் சிரித்தார். இந்திரன் கலங்கிய கண்களோடு வெளியே வந்தான். அவனுக்குச் செத்துவிடலாம் போல இருந்தது. அவன் சிறிது நேரம் வெளியே நின்ற அழுதான். இருந்தாலும் அவனிடம் நம்பிக்கை இருந்தது. இன்னும் பல இடங்கள் இருக்கின்றன என்கின்ற துணிவு வந்தது. அவன் அதனால் மேற்கொண்டு நடந்தான்.

*

இந்திரன் துறண்கெய்மில் இருக்கும் அந்தப் புகழ் பெற்ற கருங்கற் தேவாலயத்திற்குள் இருந்தான். இது பதினோராம் நூற்றாண்டில் அரசர் இரண்டாவது ஊலாவிற்காகக்



 

கட்டப்பட்டது. பின்பு பல மாற்றங்களைத் தாங்கி இன்று கருங்கற் தேவாலயமாக... ரோமாபுரியின் சிற்பக் கலையோடு, யேசுபிரானை ஞாபகப்படுத்தும் ஒரு முக்கிய தலமாக நோர்வேயில் இருக்கிறது. யேசுபிரான் மீண்டும் உயிர்த்தெழுவார் என்று பலர் நம்புகிறார்கள். சிலர் காத்து இருக்கிறார்கள். நம்பிக்கையே வாழ்க்கை. அதுவே கடவுள் என்பது அவர்கள் எண்ணம்.

இந்தத் தேவாலயம் நோர்வே அரசகுடும்பத்தின் முக்கிய வழிபாட்டுத் தலங்களில் ஒன்று என்கின்ற எந்தத் தகவலும் இந்திரனுக்கு இப்போது முக்கியம் இல்லை. அவன் தேடுவது அவனுக்கு மட்டுமே தெரியும். அதை வெளியே சொல்லவும் அவனால் முடியவில்லை. இன்றாவது அது நிறைவேற வேண்டும் என்பதே அவன் அடங்காத அவா. ஆயிரத்தி எண்ணூறு நபர்களை உள்ளடக்கக்கூடிய அந்தத் தேவாலயத்தில் இன்று அதிக கூட்டம் இல்லை. இருக்கும் கூட்டத்திற்கு பிரார்த்தனையும், பிரசங்கமும் நடக்கப் போகிறது. அது முடிய இந்திரனுக்காக யேசு காட்சி தருவார் என்பது அவன் இன்றைய அசைக்க முடியாத நம்பிக்கை. பூசைக்குப் பல சுதேசிகள் வந்து இருந்தார்கள். இரண்டு வெளிநாட்டவர் வந்து இருந்தார்கள். எல்லோரும் அமைதியாக குருவானவருக்காகக் காத்திருந்தார்கள்.

சிறிது நேரத்தில் எதிர்பார்த்தது போலக் குருவானவர் வந்தார். தனது ஆசனத்தில் ஏறி யேசுபிரானைப் பற்றி, இறையுணர்வோடு வாழ வேண்டிய வாழ்வைப் பற்றி நீண்ட நேரமாக விரிவாக உரையாற்றினார். இந்திரன் யேசுபிரானை எண்ணினான். சிலுவை சுமந்து இரத்தம் சிந்தினாலும் அவர் உயிர்த்து எழுந்தார். இன்று அவர் உயிர்த்து வந்து தரப்போகும் காட்சி பற்றிக் கனவு கண்டான். அவன் எதிர்பார்ப்பிற்கு எதிராக குருவானவர் ஆறுதலாக... இது எப்போது நிறைவுறும் என்கின்ற பொறுமை அற்ற நினைவோடு அவன்...

ஒருவாறு அவர் தனது பிரசங்கத்தை முடித்தார். கூட்டம் கலையத் தொடங்கியது. இந்திரன் கண்ணை மூடினான். தனது பிரார்த்தனைக்கான பலனை இன்று பார்த்து விடுவேன் என்கின்ற நம்பிக்கையோடு காத்திருந்தான். அவன் பிரார்த்தனை தொடர்ந்தது. எவ்வளவு நேரம் அப்படி இருந்தான் என்று

அவனுக்குத் தெரியாது. ‘நான் வந்துவிட்டேன்’ என்கின்ற குரல் வரும் என்று கண்ணை மூடிக் காத்திருந்தான். ‘நீங்கள் வெளியே செல்ல வேண்டும்.’ என்று நோர்வே நாட்டு மொழியில் யாரோ கூறியது அவன் காதில் விழுந்தது. அவன் கண்ணைத் திறந்தான். சிவபெருமானால் மட்டுமே இந்திரனை எரிக்க முடியும். என்னால் எதுவும் செய்ய இயலாது என்று அவனுக்கு எண்ணத் தோன்றியது. தனக்கு முன் யேசுபிரான் வரவில்லை என்கின்ற தோல்வி மனதோடு அவன் எழுந்தான். புயலாகத் தேவாலயத்தை விட்டு அழுதுகொண்டு வெளியேறினான்.

*

ஈழத்துச்சிதம்பரம். மார்கழிமாதத் திருவெண்பாத் தேர்த் திருவிழா. நடன நாதன் வசந்த மண்டபத்தில் எழுந்தருளி இருந்தான். வாசம், வர்ணம், நாதம், பிரகாசம் நிறைந்த அவன் தலத்தில் ஒற்றைக்காலைத் தூக்கிப் பிரபஞ்சத்தைத் தன்னில் காட்டும் அவன் நர்த்தனத்தை மனதில் கண்டு இந்திரன் மெய் சிலிர்த்தான். சிவபதம் என்பது இந்த ஆடல் அரசனின் காலில் சரணடைவது அல்லவா என்பது இந்திரனுக்குப் புலனாகியது. எங்கும் ஒளி வெள்ளம் ஆகியது. இந்த ஒளி வெள்ளத்தில், இரதோற்சவ நேரத்தில், இறைவன் இன்று வருவான். தன் ஆடலை நிறுத்தி என்னை ஆட்கொள்வான். அந்த அவா இன்று நிறைவேறப் போகிறது என்கின்ற மகிழ்வில் அவன் திளைத்தான். ஆடல் நாயகன் உள் வீதி வலம் வந்து, இரதமேறி, சக பரிவாரங்களோடு பல இரதங்கள் பவனிவர வெளி வீதி சுற்றி முடித்து, இரதம் விட்டு இறங்கி, மீண்டும் வசந்த மண்டபம் வரும் வரைக்கும் இந்திரன் ஆடல் நாயகனைக் கண்ணீரோடு பார்த்த வண்ணம் வலம் வந்தான். வசந்த மண்டபத் திரை மீண்டும் இழுத்து மூடப்பட்டது. பின்பு திறந்து ஆடல் நாயகனுக்குக் கற்பூர ஆராதனை நடத்தப்பட்டது. பிரசாதத்தோடு எல்லோரும் கலையத் தொடங்கினார்கள். இந்திரன் நம்பினான். நடராச தரிசனம் கிடைக்கும் என்று காத்திருந்தான். கூட்டம் கலைந்து கரைந்து போனது.

‘இந்திரா வா. மணிவாசகர் சபையில அன்னதானம் போடுறாங்கள். போய்ச் சாப்பிடுவம்‘ என்று கூறிய யாரோ அவனது தோழில் கைவைத்து அவனைத் தள்ளிக் கொண்டு

சென்றார்கள். 'ஆடல் நாதா இது என்ன சோதனை?' அவன் கண்கள் கண்ணீரால் நிறைந்து பார்வை அழிந்தது.

*

நான்கு உருவங்கள் அவன் முன்பு தோன்றின. அவை அவன் முன்பு அந்தரத்தில் ஆடின. அவற்றின் பின்னே இன்னும் பல உருவங்கள் தோன்றின. அவை எல்லாம் திடீரென ஒன்றாகின. ஒன்றாகியவை ஒளியாக அவனுள் புகுந்தன.

*

இந்திரன் விழித்தான். உடல் தெப்பமாக வியர்த்து இருந்தது. கனவுகளின் வால்களாகச் சில நினைவுகள். அவனுக்கு இதுவரை காலமும் விளங்காது இருந்த ஒரு உண்மை இன்று விளங்கியதாய் தோன்றியது.

## முகமூடிகள்

பாட்டிக்குப் பற்கள் எதுவும் அற்ற பொக்கை வாய். அந்த வாயில் எப்போதும் தவழும் புன்சிரிப்பு. இந்தக் காலம் போல அந்தக் காலத்தில் பொக்கை வாய்க்குப் பற்கள் கட்டியது இல்லை. பல் இல்லாது வாழ்ந்த பாட்டி பழைய கலாச்சாரங்களின் உறைவிடம் என்று சொல்லலாம். கச்சைக் கட்டாது சேலை கட்டும் காலத்தைச் சார்ந்தவர் அவர். ரமணனுக்குப் பாட்டியின் வாசம் தெரியும். அவரின் பாசம் தெரியும். சாப்பாட்டைக் குழைத்து வாயில் அன்போடு ஊட்டினால் அதில் இருக்கும் சுவை விளங்கும். பாட்டி உணவோடு நின்றுவிடாது ரமணனுக்குப் பலவிதமான அறிவும் ஊட்டினார். அந்தப் பாட்டி ரமணனுக்காக ஒரு முகமூடி செய்தார். அது ஒரு அழகான, அற்புதமான முகமூடி. அதில் பல சிறப்பு அம்சங்கள் இருந்தன. அந்தச் சிறப்பு அம்சங்களை ரமணனிடம் சேர்த்துவிட வேண்டும் என்கின்ற எண்ணத்தோடே பாட்டி அதை வனைந்தார் என்பது ரமணனுக்கு விளங்கத் தொடங்கியது. ரமணனுக்குப் பாட்டி மீது மிகவும் பாசம். பாட்டியின் சொல்; அர்த்தம் நிறைந்த நாம் பின்பற்ற வேண்டியவையே என்கின்ற அசையாத நம்பிக்கையும் இருந்தது.

பாட்டி வனைந்த முகமூடியை உடனடியாக அவனிடம் பாட்டி கொடுத்துவிடவில்லை. அதற்கு மேலும் மேலும் அவர் அழகூட்டினார். இறுதியில் இறக்கும் தறுவாயில் பாட்டி ரமணனிடம் அந்த முகமூடியை முற்றுமாய் கையளித்தார். ரமணன் அதைப் பெருமையோடும் பொறுப்போடும் பெற்றுக் கொண்டான். பெற்றுக் கொண்டதோடு மட்டும் நிற்காது அதை அணிந்தும் கொண்டான். அது அவனுக்கு அழகாக இருந்தது.

பாட்டி இறந்த பின்பு அவன் கையில் அவர் தந்த முகமூடி அவர் நினைவாக எப்போதும் இருந்தது. அதை அணிந்து கொள்வதில் அவனுக்கு அளவுகடந்த மகிழ்ச்சி. அதில் பொதிந்து கிடந்த அனைத்து அம்சங்களையும் அவன் ஆழ்ந்து கவனிப்பான். அது அவனுக்கு அடங்காத பூரிப்பை உண்டு பண்ணும். இவ்வளவு கைவண்ணமும் அறிவும் பாட்டியிடம் இருந்ததை அவன் அவர் உயிரோடு இருந்த போது முழுமையாக அறிந்து இருக்கவில்லை.

காலம் ஏவுகணையாக வயதுகளைப் பின்தள்ளி வாழ்க்கையை முன்நகர்த்தியது. பாட்டி போன பின்பு அம்மா ரமணனை அதிகம் பார்த்துக் கொண்டார். அவருக்குப் பாட்டி கொடுத்த முகமூடி பற்றித் தெரியும். அதை ரமணன் அணிவதையும் பார்த்து இருக்கிறார். அவருக்குத் தானும் ஒரு முகமூடி செய்து ரமணனுக்குக் கொடுக்க வேண்டும் என்கின்ற எண்ணம் எப்போதோ உருவாகி இருந்தது. ஆனாலும் நிறைய வீட்டு வேலைகள் அவருக்கு இருந்தன. இருந்தும் கஷ்டப்பட்டு நேரம் ஒதுக்கி அதற்கு அவர் செயல் வடிவம் கொடுத்தார்.

அவர் அதைச் சிறிது சிறிதாகச் செருக்கித் தனக்குத் தெரிந்த சித்திரங்கள், வர்ணங்கள் என்று அதில் பொதிந்து, அதை ஒரு கலைப் பொக்கிசமாக உருவாக்கத் தொடங்கினார். ரமணன் அதைப் பார்த்து இரசித்தான். அதை அம்மா மொத்தமாக ஒரு நாள் தன்னிடம் தருவார் என்பது அவனுக்குத் தெரியும். அது தனது கைக்கு வரும் காலத்திற்காக அவன் காத்திருந்தான். அம்மா அதை ஒரு நாள் அவனிடம் எதிர்பார்த்தது போலக் கொடுத்து அவனைக் கவனமாக வைத்திருக்குமாறு கூறினார். அதை அவன் பெருமையோடு வாங்கி அணிந்து அழுகு பார்த்தான். அவனுக்கு அம்மா மீது அளவுகடந்த அன்பாக இருந்தது. அம்மா முகமூடி செய்வதை ரமணனின் அப்பா அவதானித்துக் கொண்டு வந்தார். அவருக்கு அதைவிட



 

அழகான முகமூடி ஒன்று செய்து ரமணனுக்குக் கொடுக்க வேண்டும் என்கின்ற எண்ணம் ஏற்பட்டது. அவர் அதைச் செயற்படுத்தினார். அவர் அப்படி ஒரு முகமூடி செய்வது யாருக்கும் தெரியாது. ரமணனுக்கும் அது தெரியாது. அப்பா தனக்காக இவ்வளவு நேரம் செலவழித்துச் செய்வார் என்று அவன் எண்ணி இருக்கவில்லை. ரமணனின் அப்பா செய்த முகமூடியை அவர் உடனடியாக ரமணனிடம் கொடுத்துவிடவில்லை. அவர் அது ரமணனின் அம்மா செய்ததைவிட அழகாக, யொலிப்பாக இருக்க வேண்டும் என்பதில் அதிக கவனம் எடுத்தார். அதற்காக அதிக காலம் செலவழித்தார்.

அப்படிச் சில காலம் கழிந்த பின்பு ரமணனிடம் அப்பா தனது அந்த முகமூடியைக் கொடுத்தார். ரமணன் அதை எதிர்பார்க்காததால் திகைத்துப் போய்விட்டான். அதைப் பார்க்க அது பாட்டி, அம்மா ஆகியோர் தந்ததைவிட மிகவும் அழகாக இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அவன் அதை மிகவும் பெருமையோடும், ஆர்வத்தோடும் அப்பாவிடம் இருந்து வாங்கி அணிந்து கொண்டான். பாட்டி, அம்மா, அப்பா ஆகிய மூவரும் ரமணனுக்கு முகமூடி செய்து பரிசாகக் கொடுத்ததை பார்த்த அக்காள் இரகசியமாக ரமணனுக்காக ஒரு முகமூடி செய்தார். அவர் முகமூடி செய்தது யாருக்கும் தெரியாது. ஒரு நாள் திடீரென ரமணனின் முன்பு வந்து அதைப் பரிசாகக் கொடுத்தார். ரமணனுக்கு மிகவும் சந்தோசமாகவும், திகைப்பாகவும் இருந்தது. அவன் அக்காவிற்கு நன்றி கூறிய வண்ணம் அதையும் வாங்கி ஆசையோடு அணிந்து கொண்டான்.

அது அத்தோடு நின்றுவிடவில்லை. அக்காளைப் பார்த்த அண்ணனும் ஒரு முகமூடி செய்து கொடுத்தான். அதைப் பார்த்த தம்பி தங்கச்சி ஆகியவர்களும் தங்களால் இயலுமான வரையில் செதுக்கி, அழகுபடுத்திய முகமூடிகளை ரமணனுக்குப் பரிசாகக் கொடுத்தார்கள். அவன் அவற்றையும் வாங்கி ஆனந்தமாய் அணிந்து கொண்டான். இவற்றைக் கேள்விப்பட்ட ஆசிரியர்கள், சக மாணவர்கள், நண்பர்கள் என்று அவனிடம் பல முக மூடிகள் பரிசாக வந்து சேர்ந்தன.

இப்படிக் கிடைத்த எண்ணற்ற முகமூடிகளை அணிந்து அணிந்து அவன் அழகு பார்த்தான். இப்படியாக அழகு

பார்த்துப் பார்த்து தனது முகத்தையே அவன் மறந்த ஒரு நாளில் அவனுக்குத் தனது முகம் எப்படி இருக்கும்? என்கின்ற எண்ணம் திடீரென எழுந்தது. அதைத் தான் இப்போது பார்க்க வேண்டும் என்கின்ற எண்ணம் ஏற்பட்டது.

அவன் தனது அறைக்குச் சென்றான். கண்ணாடி முன்னே நின்று ஒவ்வொரு முகமூடியாக அவற்றை அகற்றத் தொடங்கினான். அவனுக்குத் திடீரென பயம் ஒன்று உருவாகியது. தனது முகம் இந்த முகமூடிகளைப் போல் அழகானதாய் இருக்காவிட்டால் என்கின்ற பயம் உண்டாகியது. அதனால் கவலையாக இருந்தது. அவன் முகமூடிகளை அகற்றுவதை நிறுத்தினான். வெகுவாக அதைப் பற்றி எண்ணி எண்ணிக் குழம்பினான். இறுதியில் எப்படியாக இருந்தாலும் அந்த முகத்தைப் பார்த்துவிட வேண்டும் என்கின்ற எண்ணத்தோடு மீதம் இருந்த முகமூடிகளையும் வெறியோடு களைந்து எறிந்தான். கடைசியாக அவனால் அவனது சொந்த முகத்தைப் பார்க்க முடிந்தது. அதில் நிறைய ஒளி இருந்தது. தெளிவு இருந்தது. உண்மை இருந்தது. எதற்காக அதை மறைக்க வேண்டும் என்கின்ற எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது. ரமணன் அதன் பின்பு அந்த முகமூடிகளை அணிவதே இல்லை. ஆனால் அவனுக்கு முகமூடி கொடுத்தவர்களுக்குத் தாங்கள் கொடுத்த முகமூடியைத் தொடர்ந்தும் ரமணன் அணியாதது மிகவும் மன வருத்தம் கொடுத்தது. அவர்கள் வருத்தம் பற்றி அவன் இப்போது கவலைப்படவில்லை. அவனுக்குத் தனது சொந்த முகத்தைப் பார்ப்பதிலேயே நிம்மதியும், திருப்தியும் உண்மையும் இருந்தது.

அவன் அந்த முகமூடிகளை ஒரு பையில் அள்ளிச் சென்று பக்கத்தில் ஓடும் ஆற்றில் வீசி எறிந்துவிட்டான்.

